*தும், தருணிம ஸர்வஸ்வம்—யௌவனமே நிரம்பியுள்ளதுமான, ஆத்யம்—ஆதி பரம்பொருளை, கம்பாயா: தடஸீமனி—காம்பா நதியின் கரையில், அத்ராக்ஷம்—பார்த்தேன்.*

**पौष्टिककर्मविपाकं पौष्पशरं सविधसीम्नि कम्पायाः ।**
**अद्राक्षमात्तयौवनमभ्युदयं किञ्चिदर्धशशिमौलेः ॥ २४ ॥**

பௌஷ்டிக கர்ம விபாகம் பௌஷ்பசரம்
[ஸவிதஸீம்னி கம்பாயா: |
அத்ராக்ஷம் ஆத்தயௌவனம் அப்யுதயம்
[கிஞ்சித் அர்த்தசசிமௌளே: ||

*பௌஷ்பசரம் — (மன்மதனுடைய ஆட்சிக்குள்பட்டதான) காமத்தை, பௌஷ்டிக கர்ம விபாகம்—புஷ்டியாக ஏற்படச் செய்வதும், ஆத்த யௌவனம்—யௌவனம் நிறைந்ததும், அர்த்தசசிமௌளே:— அர்த்த சந்த்ரனை சிரஸில் தரித்தவரான ஏகாம்பரநாதருடைய, கிஞ்சித் அப்யுதயம்—ஏதோ ஒரு (வர்ணனையிலடங்காத) மேன்மையாயிருப்பதுமான மூர்த்தியை, கம்பாயா: — கம்பா நதியுடைய, ஸவிதஸீம்னி—கரையின் ப்ரதேசத்தில், அத்ராக்ஷம்—பார்த்தேன்.*

**संश्रितकाञ्चीदेशे सरसिजदौर्भाग्यजाग्रदुत्तंसे ।**
**संविन्मये विलीये सारस्वतपुरुषकारसाम्राज्ये ॥ २५ ॥**

ஸம்ச்ரித காஞ்சீ தேசே ஸரஸிஜ தௌர்பாக்ய
[ஜாக்ரத் உத்தம்ஸே |
ஸம்வின்மயே விலீயே ஸாரஸ்வத புருஷகார
[ஸாம்ராஜ்யே ||

*ஸம்ச்ரித காஞ்சீதேச—காஞ்சீபுரியை அடைந்ததும், ஸரஸிஜதௌர்பாக்ய ஜாக்ரத் உத்தம்ஸே—சந்த்ரனை சிரோபூஷணமாயுடையதும், ஸாரஸ்வத புருஷகார ஸாம்ராஜ்யே—வாக்கினுடைய ஸாமர்த்தியத்தைப்பற்றிய ஸாம்ராஜ்யத்தோடு கூடியதும், ஸம்வின்மயே—ஞான ஸ்வரூபமாயிருப்பதுமான ஒரு மூர்த்தியிடத்தில், விலீயே—நான் லயித்திருக்கிறேன்.*

1. தாமரஸ புஷ்பமானது பகலில் மலர்ந்து இரவில் மூடுவதினால் அதற்கு ஸூர்யன் மித்ரனாகவும் சந்த்ரன், சத்ருவாகவுமிருப்பதாகச் சொல்வது கவிகளின் ஸம்ப்ரதாயம். அதையொட்டி இங்கு சந்த்ரனை ஸரஸிஜ தௌர்பாக்யனென்றும், அவன் அம்பிகையினுடைய உத்தம்ஸமாக விளங்குவதால் 'சரஸிஜ தௌர்பாக்ய ஜாக்ரத் உத்தம்ஸே' என்று அம்பிகையை வர்ணிக்கப் பட்டது.

2. புருஷகாரமென்றால் வீர்யம், ஸாமர்த்யம், பௌருஷம் என்று அர்த்தம். அம்பிகை ஸர்வ வித்யா ரூபிணியாயும் வர்ணமயியாகவும் இருக்கிறபடியால் வாக்கின் ஸாமர்த்யத்தைப்பற்றிய ஸாம்ராஜ்யத்தோடிருப்பதாக இங்கு சொல்லப்பட்டது. அம்பிகையின் உபாஸகர்கள் புருஷ ரூபமடைந்த ஸரஸ்வதீ தேவிமாதிரி ஆகிவிடுவதாகச் சொல்லப்படும். அம்பிகையின் பாதோதகத்திற்கே இவ்விதமான வாக்விலாஸத்தைக் கொடுக்கும் மஹிமையுண்டென்பதாக

'கதா காலே மாத: கதய கலிதாலக்தகரஸம்
பிபேயம் வித்யார்த்தீ தவ சரண நிர்ணேஜன ஜலம் |
ப்ரக்ருத்யா ரக்தாநாமபி ச கவிதா காரணதயா
கதா தத்தே வாணீ முக கமல தாம்பூல ரஸதாம் ||'

என்று 'ஸௌந்தர்யலஹரி'யில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இவ்விதமான பலனை யுத்தேசித்துச் செய்யப்படும் உபாஸனா க்ரமங்களுக்கு ஸாரஸ்வத ப்ரயோகங்களென்று பெயர்.

मोदितमधुकरविशिखं स्वादिमसमुदायसारकोदण्डम् ।
आदृतकाञ्चीखेलनमादिममारुण्यभेदमाकलये ॥ २६ ॥

மோதித மதுகர விசிகம் ஸ்வாதிம ஸமுதாய
[ஸார கோதண்டம் |
ஆத்ருத காஞ்சீ கேலனம் ஆதிமம்
[ஆருண்யபேதம் ஆகலயே ||

மோதித மதுகர விசிகம்—வண்டுகளுக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கும் (புஷ்ப) பாணங்களையுடையதும், ஸ்வாதிம ஸமுதாய-தித்திப்பெல்லாம் சேர்ந்து, ஸார கோதண்டம்—ஸாரமாயிருக்கும்

(இக்ஷு-) கோதண்டத்தையுடையதும், ஆத்ருத காஞ்சீ கேலனம் காஞ்சீபுரியில் விளையாடுவதை ஆதரித்ததும், ஆதிமம் - எல்லா வற்றிற்கும் ஆதியாயிருப்பதுமான, ஆருண்யபேதம்—சிவந்த தொரு மூர்த்தியை, ஆகலயே - தியானிக்கிறேன்.

उररीकृतकाञ्चिपुरीमुपनिषदरविन्दकुहरमधुधाराम् ।
उन्नम्रस्तनकलशीमुत्सवलहरीमुपास्महे शम्भोः ॥ २७ ॥

உரரீக்ருத காஞ்சி புரீம் உபநிஷதரவிந்த
[குஹர மது தாராம் |
உன்னம்ர ஸ்தனகலசீம் உத்ஸவலஹரீம்
[உபாஸ்மஹே சம்போ: ||

உரரீக்ருத காஞ்சிபுரீம் - காஞ்சீபுரியை விளங்கச்செய்ப வளும், உபநிஷதரவிந்த - உபநிஷத்துக்களாகிய தாமரஸ புஷ்பத் தின், குஹரமது தாராம் - நடுவிலிருந்து பெருகும் மகரந்தப் பெருக்கு மாதிரியிருப்பவளும், உன்னம்ர ஸ்தனகலசீம் - வளை யாத (நிமிர்ந்திருக்கும்) ஸ்தன கலசங்களையுடையவளும், சம்போ:- பரமசிவனுடைய, உத்ஸவ லஹரீம் - பேரானந்தத்தின் அலை போன்றவளுமான ஸ்ரீ காமாக்ஷியை, உபாஸ்மஹே—உபாஸிக் கிறோம்.

புஷ்பங்களிலிருந்து தேன் (பூத்தேன்) பெருகுவதுமாதிரி உபநிஷத்துக்களாகிய தாமரஸ புஷ்பங்களிலிருந்து பெருகும் தேனாக அம்பிகையைச் சொல்லப்பட்டது. சகல உபநிஷத்துக் களுக்கும் முடிவான தாத்பர்யமாக அம்பிகை இருப்பதால் இம் மாதிரி சொல்லப்பட்டது.

ஏணசிசு தீர்க்கலோசனம் - மான்குட்டியினுடையதைப் போன்ற நீண்ட கண்களையுடையதும், ஸந்ததம் - எப்போதும், நமதாம் - நமஸ்கரிக்கும் பக்தர்களுடைய, ஏன: பரிபந்தி - பாபத்தை தடுப்பதும் (போக்குவதும்), ஏகாம்ரநாத ஜீவிதம் - ஏகாம்ரநாதருடைய பிராணனுயிருப்பதும், ஏவம் பக தூரம் - இம்மாதிரி என்று சொல்வதற்கு எட்டாததுமான, ஏகம் - ஒரு பரம்பொருளை, அவலம்பே - சரணமடைகிறேன்.

அம்பிகையினுடைய ஸ்வரூபமானது இம்மாதிரிதானிருக்கிறதென்பதாக ஒருவராலும் சொல்லமுடியாது என்று இங்கு சொல்லப்பட்டது. இதேமாதிரி 'ஏவமித்யாகமாபோத்யா', 'ஏதத் தத் இத்யனிர்தேச்யா' என்பதாக ஸ்ரீ லலிதா த்ரிசதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

स्मयमानमुखं काञ्चीमयमानं कमपि देवताभेदम् ।
दयमानं वीक्ष्य मुहुर्वयमानन्दामृताम्बुधौ मग्नाः ॥ २९ ॥

ஸ்மயமான முகம் காஞ்சீமயமானம் கமபி
[தேவதாபேதம் |
தயமானம் வீக்ஷ்ய முஹுர் வயம் ஆனந்தாம்ரு
[தாம்புதௌ மக்னா: ||

ஸ்மயமானமுகம்—சிரித்த முகத்தையுடையதும், காஞ்சீமயமானம்—காஞ்சீபுரியை வியாபித்து விளங்குவதும், தயமானம்—கருணையோடு கூடியதுமான, கமபி தேவதாபேதம்—ஒரு தேவதையை, முஹுர் வீக்ஷ்ய — அடிக்கடி பார்த்து, வயம் — நாம், ஆனந்தாம்ருதாம்புதௌ—ஆனந்தமென்ற அம்ருத ஸமுத்ரத்தில், மக்னா: — மூழ்கியிருக்கிறோம்.

कुतुकजुषि काञ्चिदेशे कुमुदतपोराशिपाकशेखरिते ।
कुरुते जनो मनोऽयं कुलगिरिपरिबृढकुलैकमणिदीपे ॥ ३० ॥

குதுகஜுஷி காஞ்சிதேசே குமுத தபோராசி
[பாக சேகரிதே |
குருதே ஜனோ மனோ'யம் குலகிரி பரிப்ருட
[குலைக மணிதீபே ||

காஞ்சிதேசே — காஞ்சீபுரியில், குதுகஜுஷி — உத்ஸாஹத்தோடு வஸிப்பதும், குமுத — நீலோத்பலங்களின், தபோராசி பாக—தபஸ்ஸின் பரிபாகமான சந்த்ரனை, சேகரிதே—சிரோபூஷணமாய் உடையதும், குலகிரி பரிப்ருட - குலபர்வதங்களுக்குத் தலைவனை ஹிமவானுடைய, குலைக மணிதீபே - குலத்திற்கு ஒரே ஒரு (முக்யமான) ரத்ன தீபமாய் விளங்கும் ஒரு ரூபத்தில், அயம் ஜன:—இந்த ஜனமானவன், மன: குருதே - மனத்தைச் செலுத்துகிறான்.

1. அதாவது, தான் அவ்விதமாக த்யானம் செய்வதை 'அயம் ஜன: மன: குருதே' என்று சொல்லுகிறார்.

2. அம்பிகையானவள் தன் பிதாவான ஹிமவானுடைய குலத்திற்கு ரத்ன தீபமாய், குன்றுவிளக்காய், இருப்பதை நமது ஆசார்யாளும் 'ரூபாதிகா சிகரி பூபாலவம்சமணிதீபாயிதா பகவதீ' என்பதாக 'அம்பாஷ்டக'த்தில் வர்ணித்திருக்கிறார்கள்.

वीक्षेमहि काञ्चिपुरे विपुलस्तनकलशगरिमपरवशितम् ।
विद्रुमसहचरदेहं विभ्रमसमवायसारसंनाहम् ॥ ३१ ॥

வீக்ஷேமஹி காஞ்சிபுரே விபுல ஸ்தனகலச
[கரிம பரவசிதம் |
வித்ரும ஸஹசர தேஹம் விப்ரம ஸமவாய
[ஸார ஸன்னாஹம் ||

விபுல ஸ்தனகலச கரிம - பருத்ததான ஸ்தனபாரங்களின் கனத்தினால், பரவசிதம் - மிகவும் குனிந்ததாயும், வித்ருமஸஹசர தேஹம் - பவழம் போன்றதான சரீரத்தையுடையதும், விப்ரம ஸமவாய ஸார ஸன்னாஹம் - காமகேளிகளுடைய சேர்க்கையின் ஸாரமாகிற (யுக்த) கோலத்தோடு கூடியதுமான ஒரு மூர்த்தியை, காஞ்சிபுரே - காஞ்சீபுரியில், வீக்ஷேமஹி - பார்க்கிறோம்.

कुरुविन्दगोत्रगात्रं कूलचरं कमपि नौमि कम्पायाः ।
कूलङ्कषकुचकुम्भं कुसुमायुधवीर्यसारसंरम्भम् ॥ ३२ ॥

குருவிந்த கோத்ர காத்ரம் கூலசரம் கமபி
[நௌமி கம்பாயா: |
கூலங்கஷ குசகும்பம் குஸுமாயுத வீர்ய
[ஸார ஸம்ரம்பம் ||

*குருவிந்த கோத்ர காத்ரம் - சிகப்பு ரத்னத்திலுண்டானது போன்ற சரீரத்தையுடையதும், கம்பாயா: கூலசரம் - கம்பா நதியின் கரையில் ஸஞ்சரிப்பதும், கூலங்கஷ குசகும்பம் - (ரவிக்கையாகிற) கரையைக் கிழித்தான ஸ்தனங்களை யுடையதும், குஸுமாயுத - மன்மதனுடைய, வீர்ய ஸார ஸம்ரம்பம் - வீர்யத்தின் ஸாரமாகிய வேகத்தோடு கூடியதுமான, கமபி - ஒரு (வர்ணிக்க முடியாத) மூர்த்தியை, நௌமி - நமஸ்கரிக்கிறேன்.*

1. *அம்பாளுடைய வக்ஷ: ப்ரதேசத்தை இதேமாதிரி ஆசார்யாளும்,*

'குசௌ ஸத்ய: ஸ்வித்யத் தடகடித கூர்பாஸ பிதுரௌ
கஷந்தௌ தோர்மூலே கனக கலசாபௌ கலயதா |

*என்பதாக 'ஸௌந்தர்யலஹரி'யில் வர்ணித்திருக்கிறார்கள்.*

*இவ்விதம் ஸ்தனங்களை வர்ணிப்பதானது அம்பாளுடைய ஸௌந்தர்யத்தைக் காட்டுவது தவிர, ஜகன்மாதாவான அம்பாளுடைய மஹோத்க்ருஷ்டமான மாத்ருவத்தைக் காட்டுவதற்காக இம்மாதிரி அடிக்கடி சொல்லப்படுகிறது.*

**कुड्मलितकुचकिशोरैः कुर्वाणैः काञ्चिदेशसौहार्दम् ।**
**कुङ्कुमशोणैर्निचितं कुशलपथं शंभुसुकृतसंभारैः ॥ ३३ ॥**

குட்மளித குச கிசோரை: குர்வாணை:
[காஞ்சிதேச ஸௌஹார்தம் |
குங்கும சோணைர் நிசிதம் குசல பதம்
[சம்புஸுக்ருத ஸம்பாரை: ||

*குட்மளித குச கிசோரை:- கொஞ்சம் மலர்ந்ததுபோன்ற இளம் ஸ்தனங்களையுடையதும், காஞ்சிதேச - காஞ்சிதேசத்தில், ஸௌஹார்தம் குர்வாணை:- பற்றுதலை செய்வதும் (உடையதும்) குங்குமசோணை: - குங்குமப் பூவைப்போல் (அல்லது,*

குங்குமத்தைப்போல்) சிகப்பு நிறமுடையதும், சம்பு ஸாக்ருத ஸம்பாரை: - பரமசிவனுடைய ஸாக்ருதங்களின் சேர்க்கையா யிருப்பதுமான ஒரு மூர்த்தியால், குசலபதம் - (பக்தர்களுடைய) க்ஷேமமார்க்மானது, நிசிதம் - போடப்பட்டிருக்கிறது. (ஏற் படுத்தப்பட்டிருக்கிறது.)

अङ्कितकचेन केनचिदन्धङ्करणौषधेन कमलानाम् ।
अन्तःपुरेण शम्भोरलंक्रिया कापि कल्प्यते काञ्च्याम् ॥३४॥

அங்கித கசேன கேனசித்
[அந்தம்கரணௌஷதேன கமலானும் |
அந்த: புரேண சம்போ: அலங்க்ரியா காபி
[கல்ப்யதே காஞ்ச்யாம் ||

கமலானும் - தாமரை புஷ்பங்களுக்கு, கேனசித் - ஏதோ ஒரு, அந்தம்கரணௌஷதேன - இருட்டைச்செய்யும் மருந்தினுல் (அதாவது, அவற்றை மூடச்செய்யும் சந்த்ரனுல்), அங்கித கசேன - அலங்கரிக்கப்பட்ட கேசங்களையுடையவளான, சம் போ: - பரமசிவனுடைய, அந்த: புரேண - பத்னியால், காஞ்ச் யாம் - காஞ்சீபுரியில் (காஞ்சீபுரிக்கு), காபி அலங்க்ரியா - ஒரு (வர்ணனையிலடங்காத) அழகானது, கல்ப்யதே - ஏற்படுத்தப்படு கிறது.

ऊरीकरोमि सन्ततमूष्मलफालेन लालितं पुंसा ।
उपकम्पमुचितखेलनमुर्वीधरवंशसंपदुन्मेषम् ॥ ३५ ॥

ஊரீகரோமி ஸந்ததம் ஊஷ்மல பாலேன
[லாலிதம் பும்ஸா |
உபகம்பம் உசிதகேலனம் உர்வீதர வம்ச
[ஸம்பத் உன்மேஷம் ||

ஊஷ்மல பாலேன - சுடுகிற நெற்றியையுடைய (அதாவது அக்னியை நேத்ரமாக உடைய), பும்ஸா - புருஷனுல் (அதாவது, பரமசிவனுல்), லாலிதம் - சீராட்டப்படுகிறதும், உபகம்பம் - கம்பா நதியின் ஸமீபத்தில், உசிதகேலனம் - விளையாடுவதில் ப்ரியத்தோடு (அல்லது, பழக்கத்தோடு) கூடியதும், உர்வீதர

வம்ச - ஹிமவானுடைய வம்சத்தின், ஸம்பத் உன்மேஷம் - ஸம்பத்தை விளங்கச் செய்வதுமான ஒரு மூர்த்தியை, ஸந்ததம் - எப்போதும், உரரீகரோமி - த்யானித்துக் கொண்டிருக்கிறேன்.

अङ्कुरितस्तनकोरकमङ्कालङ्कारमेकचूतपतेः ।
आलोकेमहि कोमलमागमसंलापसारयाथार्थ्यम् ॥ ३६ ॥

அங்குரித ஸ்தனகோரகம் அங்காலங்காரம்
[ஏக சூதபதே: |
ஆலோகேமஹி கோமளம் ஆகம ஸம்லாப
[ஸார யாதார்த்யம் ||

அங்குரித ஸ்தனகோரகம் - மொட்டுக்கள் போன்ற ஸ்தனங்களையுடையதும், கோமளம் - ம்ருதுவானதும், ஆகம ஸம்லாப - வேதவாக்குகளின், ஸார யாதார்த்யம் - ஸாரமான தாத்பர்யமாய் இருப்பதும், ஏக சூதபதே: - ஏகாம்ரநாதருடைய, அங்காலங்காரம் - மடியின் அலங்காரமாயிருப்பதுமான ஒரு மூர்த்தியை, ஆலோகேமஹி - பார்த்துக்கொண்டிருக்கிறோம்.

पुञ्जितकरुणमुदञ्चितशिञ्जित मणिकाञ्चि किमपि काञ्चिपुरे ।
मञ्जरितमृदुलहासं पिञ्जरतनुरुचि पिनाकिमूलधनम् ॥ ३७ ॥

புஞ்ஜித கருணம் உதஞ்சித சிஞ்ஜித
[மணி காஞ்சி கிமபி காஞ்சிபுரே |
மஞ்ஜரித ம்ருதுள ஹாஸம் பிஞ்ஜர
[தனுருசி பிநாகி மூலதனம் ||

புஞ்ஜித கருணம் - கருணை நிறைந்ததும், உதஞ்சித சிஞ்சித மணிகாஞ்சி - ரத்னமயமான ஒட்டியாணத்தின் சலங்கைகளின் சப்தத்தை வெளிப்படுத்துவதும், மஞ்ஜரித ம்ருதுள ஹாஸம் மந்தஹாஸம் நிறைந்ததும், பிஞ்ஜரதனுருசி - பொன் போன்ற தேஹகாந்தியுடையதும், பிநாகி மூலதனம் - பரமசிவனுக்கு மூலதனமாயிருப்பதுமான, கிமபி - ஏதோ ஒரு மூர்த்தியானது, காஞ்சிபுரே - காஞ்சீபுரியில் (விளங்குகின்றது).

[குறிப்பு :— மூலத்திலிருக்கும் ஒவ்வொரு பதத்திற்கும் தனித்தனியாக அர்த்தம் சொல்லி அந்த பதத்தினுல் ச்லோகத்தில்

என்ன அர்த்தம் ஏற்படுகிறது என்று காட்டுவதாயிருந்தால் ஒவ்வொரு ச்லோகத்திற்கும் ஏராளமான இடம் வேண்டும். ஆகவே இந்த ஸ்தோத்ரத்தின் மொழி பெயர்ப்பில் பதங்களின் சேர்க்கைக்கு எது ஸாரமான பாவமோ அதுமட்டும் காட்டப்பட்டிருக்கிறது என்று தெரிவித்துக் கொள்ளப்படுகிறது.]

लोलहृदयोऽस्मि शम्भो-र्लोचनयुगलेन लेह्यमानायाम् ।
ललितपरमशिवायां लावण्यामृततरङ्गमालायाम् ॥ ३८ ॥

லோல ஹ்ருதயோऽஸ்மி சம்போ:
லோசந யுகளேந லேஹ்யமாநாயாம் |
லாலித பரமசிவாயாம்
லாவண்யாம்ருத தரங்க மாலாயாம் ||

சம்போ: - பரமசிவனுடைய, லோசநயுகளேந - இரு கண்களாலும், லேஹ்யமாநாயாம் - ஆசையோடு அனுபவிக்கப்படுவதும், லாலித பரமசிவாயாம் - பரமசிவனை மோஹிக்கச் செய்வதும், லாவண்யாம்ருத தரங்க மாலாயாம் - ஸௌந்தர்யமாகிற அம்ருத ஸமுத்ரத்தின் அலைகளின் கூட்டம் போலிருப்பதுமான ஒரு மூர்த்தியினிடத்தில், லோலஹ்ருதய:அஸ்மி - ஊசலாடும் (அல்லது, ஆசையோடு கூடிய) மனதோடிருக்கிறேன்.

1. அம்பிகையின் அழகைத் தன் கண்களால் பருகிவிடுவது போல் பரமசிவன் பார்ப்பதாக 'லோசநயுகளேந லேஹ்யமாநாயாம்' என்பதால் சொல்லப்பட்டது.

2. ஸௌந்தர்யமாகிற ஸமுத்ரத்தில் அடுத்தடுத்து வரும் அலைகள்போல் அம்பிகை இருப்பது 'லாவண்யாம்ருத தரங்க மாலாயாம்' என்பதால் சொல்லப்பட்டது. அடுத்தடுத்து வரும் அலைகளின் சேர்க்கைக்கு (தரங்க மாலைக்கு) லஹரீ என்று பெயர். அம்பிகை இவ்விதமான ஸௌந்தர்யலஹரீ ரூபமாயிருப்பதால் அந்த ஸௌந்தர்யத்தைப்பற்றித் தான் எழுதிய ஸ்தோத்திரத்திற்கே ஸ்ரீமதாசார்யாள் 'ஸௌந்தர்யலஹரீ' என்று பெயர் வைத்தார்கள்.

मधुकरसहचरचिकुरै-र्मदनागमसमयदीक्षितकटाक्षैः ।
मण्डितकम्पातीरै र्मङ्गलकन्दैर्ममास्तु सारूप्यम् ॥ ३९ ॥

மதுகர ஸஹசர சிகுரை:
மதநாகம ஸமயதீக்ஷித கடாக்ஷை: |
மண்டித கம்பா தீரைர்
மங்கள கந்தைர் மமாஸ்து ஸாரூப்யம் ||

*மதுகர ஸஹசர சிகுரை: - வண்டுகள் போன்றதான (கறுத்த) கூந்தல்களையுடையதும், மதநாகமஸமய - காமசாஸ்த்ரத்தைப் போதிப்பதென்பதான, தீக்ஷித - தீக்ஷையோடு கூடிய, கடாக்ஷை: - கடாக்ஷங்களையுடையதும், மண்டித கம்பா தீரை: - கம்பாநதியின் கரையை அலங்கரிப்பதும், மங்கள கந்தை:- மங்களத்தின் மூலம் போன்றதுமான ஒரு மூர்த்தியோடு, ஸாரூப்யம் - ஸாரூப்யமானது, மம அஸ்து - எனக்கு ஏற்படட்டும்.*

वदनारविन्दवक्षो-वामाङ्कतटीवशंवदीभूता ।
पुरुषत्रितये त्रेधा पुरन्ध्रिरूपा त्वमेव कामाक्षि ॥ ४० ॥

வதநாரவிந்த வக்ஷோ-
வாமாங்க தடீ வசம்வதீ பூதா |
புருஷ த்ரிதயே த்ரேதா
புரந்த்ரி ரூபா த்வமேவ காமாக்ஷி ||

*காமாக்ஷி - ஹே காமாக்ஷி தேவி! - புருஷத்ரிதயே - ப்ரம்ஹா, விஷ்ணு, சிவன் என்ற மூன்று பதிகளிடத்தில், வதநாரவிந்த வக்ஷோ வாமாங்கதடீ - முறையே அவர்களுடைய முககமலத்திலும், மார்பிலும், இடதுமடியிலும், வசம்வதீ பூதா - எப்போதும் இருந்துகொண்டு, த்ரேதா - மூன்று ரூபங்களோடு கூடிய, புரந்த்ரி ரூபா - பத்னீ ஸ்வரூபமாக, த்வமேவ - நீயே (இருக்கிறாய்).*

*இதனால் ஸரஸ்வதீ, லக்ஷ்மீ, பார்வதீ என்ற மூவரும் பரப்ரம்ஹ ஸ்வரூபிணியான அம்பிகையின் ரூபங்களென்பது சொல்லப்பட்டது.*

बाधाकरीं भवाब्धे-राधाराद्यम्बुजेषु विचरन्तीम् ।
आधारीकृतकाञ्चीं बोधामृतवीचिमेव विमृशामः ॥ ४१ ॥

பாதாகரீம் பவாப்தே:
ஆதாராத்யம்புஜேஷு விசரந்தீம் |
ஆதாரீக்ருத காஞ்சீம்
போதாம்ருத வீசிமேவ விம்ருசாம: ||

*பவாப்தே: - ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்திற்கு, பாதாகரீம் - இடையூறைச் செய்பவளும், ஆதாராதி அம்புஜேஷு - மூலாதாரம் முதலான கமலங்களில், விசரந்தீம் - ஸஞ்சரிப்பவளும், ஆதாரீக்ருத காஞ்சீம் - காஞ்சீபுரியை வாஸஸ்தானமாக உடையவளும், போதாம்ருத வீசிம் ஏவ - ஞானம்ருத (ஸமுத்ர) த்தின் அலையாயிருப்பவளுமான ஸ்ரீ காமாக்ஷியையே, விம்ருசாம: - த்யானம் செய்கிறோம்.*

1. *'பவாப்தே: பாதாகரீம்' என்பதினுல் பக்தர்களை ஸம்ஸாரமாகிற ஸமுத்ரத்திலிருந்து கரையேறச்செய்து விடுவிப்பவளாக அம்பிகையைப் பற்றிச் சொல்லப்பட்டது. இதேமாதிரி ஆசார்யாளால்*

'.......................ஜன்மஜலதேள
நிமக்நாநாம் தம்ஷ்ட்ரா முராரிபு வராஹஸ்ய பவதி ||'
*என்று 'ஸௌந்தர்யலஹரி'யிலும்*

'ஸம்ஸார பங்க நிர்மக்ந ஸமுத்தாண பண்டிதா | '
*என்று லலிதா ஸஹஸ்ரநாமத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.*

2. *அம்பிகையானவள் குண்டலினீ ரூபிணியாய் மூலாதாரம் முதலான ஷட் சக்ரங்களிலும் ஸஞ்சரிப்பது 'ஆதாராத்யம்புஜேஷு விசரந்தீம்' என்பதால் இங்கு சொல்லப்பட்டது. இதைவிரிவாக ஆசார்யாள் 'ஸௌந்தர்யலஹரி'யில் வர்ணித்திருக்கிறார்கள்.*

'மஹீம் மூலாதாரே கமபி மணிபூரே ஹுதவஹம்
ஸ்திதம் ஸ்வாதிஷ்டானே ஹ்ருதி மருதம் ஆகாசமுபரி |
மனோ௨பி ப்ரூமத்யே ஸகலமபி பித்வா குலபதம்
ஸஹஸ்ராரே பத்மே ஸஹ ரஹஸி பத்யா விஹரஸே ||

ஸுதாதாராஸாரை: சரணயுகளாந்தர் விகளிதை:
ப்ரபஞ்சம் ஸிஞ்சந்தீ புநரபி ரஸாம்நாய மஹஸ: |
அவாப்ய ஸ்வாம் பூமிம் புஜகநிபம் அத்யுஷ்ட வலயம்
ஸ்வமாத்மாநம் க்ருத்வா ஸ்வபிஷி குலகுண்டே குஹரிணி ||'

**कलयाम्यन्तः शशधर-कलयाङ्कितमौलिममलचिद्वलयाम् ।**
**अलयामागमपीठी-निलयां वलयाङ्कसुन्दरीमम्बाम् ॥ ४२ ॥**

கலயாம்யந்த: சசதர-
கலயாங்கித மௌளிம் அமல-சித்வலயாம் |
அலயாம் ஆகமபீடி-
நிலயாம் வலயாங்க ஸுந்தரீம் அம்பாம் ||

*சசதர கலயா அங்கித மௌளிம் - சந்த்ரனுடைய கலையினால் அலங்கரிக்கப்பட்ட கிரீடத்தையுடையவளும், அமல சித்வலயாம்- நிர்மலமான சித்ரூபமாயிருப்பவளும், அலயாம் - அழிவில்லாதவளும், ஆகமபீடி நிலயாம் — வேதங்களாகிற பீடத்திலிருப்பவளும், வலயாங்க ஸுந்தரீம் அம்பாம் - வளைகளாயணிந்த ஸுந்தரியான ஜகன்மாதாவை, அந்த: கலயாமி - என்மனதில் எப்போதும் த்யானம் செய்கிறேன்.*

**शर्वादि परमसाधक-गुर्वानीताय कामपीठजुषे ।**
**सर्वाकृतये शोणिम-गर्वाय समर्प्यते हृदयम् ॥ ४३ ॥**

சர்வாதி பரம ஸாதக
குர்வாநீதாய காமபீடஜுஷே |
ஸர்வாக்ருதயே சோணிம-
கர்வாய ஸமர்ப்யதே ஹ்ருதயம் ||

*சர்வாதி - பரமசிவன் முதலான, பரமஸாதக குருவாநீதாய- உத்தமமான ஸாதகர்களான குருக்களால் வரவழைக்கப்பட்டதும் (உபாஸிக்கப்பட்டதும்), காம பீடஜுஷே - காமகோடி பீடத்தில் விளங்குவதும், ஸர்வாக்ருதயே - ஸகலமான ஜகத்தின் ரூபமாயிருப்பதும், சோணிம கர்வாய - உயர்ந்ததான சிகப்பு நிறத்தையுடையதுமான ஒருமூர்த்தியிடத்தில், ஹ்ருதயம்-என்னுடைய மனதானது, ஸமர்ப்யதே-அர்ப்பணம் பண்ணப்படுகிறது.*

அம்பிகையின் உபாஸகர்களில் பரமசிவன் முதன்மையாகச் சொல்லப்படுவர். இதனால் அவரை ஆதிகுரு, ஆதிநாதரென்று சொல்வது ஸம்ப்ரதாயம். அம்பிகையை ப்ரதிபாதிக்கும் சாஸ்த்ரங்களாகிய தந்த்ரங்கள் பரமசிவனால் தன்னுடைய இரு அம்சங்களான சிவ, சக்தி ரூபங்களில் குரு, சிஷ்ய பாவத்தோடிருந்து, வெளியிடப்பட்டனவாகச் சொல்லப்படுகிறது.

' குரு சிஷ்ய பதே ஸ்தித்வா ஸ்வயமேவ ஸதாசிவ: |
ப்ரச்னோத்தர பதைர் வாக்யை: தந்த்ரம் ஸமவதாரயத் ||'

குருமண்டலத்தைச் சொல்லும்போதும் ' ஸதாசிவஸமாரம்பாம் ' என்று சொல்வது வழக்கம்.

समया सांध्यमयूखैः समया बुद्ध्या सदैव शीलितया ।
उमया काञ्चीरतया न मया लभ्येत किं नु तादात्म्यम् ॥

ஸமயா ஸாந்த்ய-மயூகை:
ஸமயா புத்யா ஸதைவ சீலிதயா |
உமயா காஞ்சீ ரதயா
ந மயா லப்யேத கிம் நு தாதாத்ம்யம் ||

ஸாந்த்யமயூகை:-ஸந்த்யாகாலத்து (ஸூர்ய) கிரணங்களுக்கு ஸமயா - ஸமானமான காந்தியையுடையவளும், ஸமயா புத்யா - பேதமில்லாமல் ஸமமான புத்தியுடன், (அதாவது, அவ்விதமான புத்தியுள்ளவர்களால்), ஸதைவ சீலிதயா - ஸதாகாலமும் உபாஸிக்கப்பட்டவளும், காஞ்சீரதயா - காஞ்சீபுரியில் ப்ரீதியுள்ளவளாயுமிருக்கிற, உமயா - உமாதேவியோடு, தாதாத்ம்யம் - ஐக்ய பாவனையானது (அல்லது, ஸாயுஜ்யமானது), மயா - என்னால் ந லப்யேத கிம் நு - அடையப்படமுடியாததா?

இங்கு சொல்லப்பட்ட ஸம புத்தியைப்பற்றிப் பின்வரும் 50-வது ச்லோகத்தில் விஸ்தரிக்கப்படுகிறது.

जन्तोस्तव पदपूजन-सन्तोषतरङ्गितस्य कामाक्षि ।
बन्धो यदि भवति पुनः सिन्धोरम्भःसु बम्भ्रमीति शिला ॥ ४५ ॥

ஜந்தோஸ்தவ பதபூஜந-
ஸந்தோஷ-தரங்கிதஸ்ய காமாக்ஷி |

பந்தோ யதி பவதி புந:
ஸிந்தோரம்ப:ஸு பம்ப்ரமீதி சிலா ||

**காமாக்ஷி - ஹே காமாக்ஷி தேவியே! தவ பத பூஜா - உன் பாதங்களைப் பூஜிப்பதினால் ஏற்படும், ஸந்தோஷ தரங்கிதஸ்ய — ஸந்தோஷம் நிறைந்த, ஜந்தோ: - ப்ராணிக்கு (மனுஷ்யனுக்கு), பந்த: - ஜன்ம (அல்லது கர்ம) ஸம்பந்தமானது, புந: பவதி யதி - திரும்பவும் ஏற்படுமென்றால் (அது) ஸிந்தோ: அம்ப: ஸு - நதி ஜலத்தில், சிலா - கற்பாறையானது, பம்ப்ரமீதி - சுழலும் (என்று சொல்வது மாதிரி ஆகும்).**

*அதாவது, ஜலத்தில் கற்பாறையானது மிதக்கிறது என்று சொன்னால் எவ்வளவு அஸம்பாவிதமாயிருக்குமோ, அதேமாதிரி அம்பிகையின் உபாஸனையிலீடுபட்டவனுக்கு புனர்ஜன்மம் உண்டு என்று சொல்வது ஆகும் என்று தாத்பர்யம்.*

कुण्डलि कुमारि कुटिले चण्डि चराचरसवित्रि चामुण्डे ।
गुणिनि गुहारणि गुह्ये गुरुमूर्ते त्वां नमामि कामाक्षि ॥

குண்டலி குமாரி குடிலே
சண்டி சராசர ஸவித்ரி சாமுண்டே |
குணிநி குஹாரணி குஹயே
குருமூர்த்தே த்வாம் நமாமி காமாக்ஷி ||

**குண்டலி - குண்டலங்களை(அதாவது, தாடங்கங்களை)உடையவளும், குமாரி - பால்யமான வயதுடையவளும் (அல்லது பாலா ரூபிணியாயிருப்பவளும்), குடிலே - குண்டலினீ ஸ்வரூபமாயிருப்பவளும், சண்டி - சண்டிரூபிணியாயிருப்பவளும், (அல்லது மங்களத்தைச் செய்பவளும்), சராசரஸவித்ரி - ஜங்கம ஸ்தாவராத்மகமான ஸகல ஜகத்தையும் ஸ்ருஷ்டித்தவளும், சாமுண்டே-சாமுண்டாரூபிணியாயிருப்பவளும், குணிநி - த்ரிகுணங்களோடிருப்பவளும், குஹாரணி-(மனதிலிருக்கும்) அந்தகாரத்தைப் போக்கடிப்பவளும், குஹ்யே - ரஹஸ்யமான ஸ்வரூபத்தோடிருப்பவளும், குருமூர்த்தே - குரு ஸ்வரூபியாயிருப்பவளுமான, காமாக்ஷி — ஹே காமாக்ஷியே! த்வாம் நமாமி - உன்னை நமஸ்கரிக்கிறேன்.**

இந்த ச்லோகத்தில் அம்பிகையானவள் பலவிதமான நாமங்களால் சொல்லப்பட்டிருக்கிறாள். அம்பிகையின் ரூபமான குண்டலினீ சக்தியானவள் " புஜகநிபம் அத்யுஷ்டவலயம் " என்றபடி மூன்றரைச் சுற்றுக்களுடைய ஸர்ப்பாகாரமாக சுருண்டிருப்பதால் குடிலையென்று பெயர் ஏற்பட்டது. பக்தர்களுக்கு விரோதிகளாயிருப்பவர்களிடத்தில் அம்பிகை கோபத்தோடிருப்பதால் சண்டீ என்று பெயர். (தேவீ மாஹாத்ம்யத்தின் மூன்றாவது பாகமான உத்தர சரித்ரத்தில் ப்ரதிபாதிக்கப்படும் அம்பிகையின் முக்யமான ரூபத்திற்கு சண்டி என்று பெயர். இதிலிருந்து தேவீ மாஹாத்ம்யத்திற்கே சண்டி என்ற பெயரும் உண்டு). அம்பிகையின் ரூபமான காளிகாதேவியானவள் சண்டன், முண்டன் என்ற இரு அஸுரர்களை ஸம்ஹாரம் செய்ததினால் அவளுக்குச் சாமுண்டா என்று பெயர் ஏற்பட்டது.

'யஸ்மாத் சண்டம் ச முண்டம் ச க்ருஹீத்வா த்வம் உபாகதா|
சாமுண்டேதி ததோ லோகே க்யாதா தேவி பவிஷ்யஸி ||'

(துர்காதேவியின் மந்த்ரமான நவார்ண மந்த்ரத்தில் சாமுண்டாதேவியைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது). மூலப்ரக்ருதி ரூபமாய் அம்பிகை இருக்கும்போது ஸத்வ, ரஜஸ், தமோகுணங்களாகிய மூன்று குணங்களும் ஸமமான நிலையோடு அவளிடத்திலிருப்பனவாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸத்வம் ரஜஸ் தம இதி குணத்ரயமுதாஹ்ருதம் |
ஸாம்யாவஸ்திதிரேதேஷாம் அவ்யக்திம் ப்ரக்ருதிம் விது: ||'

இந்தக் குணங்கள் தனித்தனியாக மேலிட்டிருக்கும்போது வாமா, ஜ்யேஷ்டா, ரௌத்ரீ என்ற சக்தி ரூபங்களும், ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரர்களும் அம்பிகையிடமிருந்து ஏற்படுவதாகச் சொல்லப்படும். ஆகவே அம்பிகையை இங்கு குணினி என்று சொல்லப்பட்டது. கு என்ற அக்ஷரமானது மனதிலிருக்கும் அந்தகாரத்தைக் (இருட்டை, அக்ஞானத்தை) குறிக்கும். அம்பிகை அவ்விதமான இருட்டைப் போக்குவதால் கு-ஹாரிணி என்ற இங்கு சொல்லப்பட்டது. அம்பிகை குருமூர்த்தியாயிருப்பது ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாமத்திலும் "குருமூர்த்தி:", "குருமண்டலரூபிணீ", "தக்ஷிணாமூர்த்திரூபிணீ" என்ற நாமங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

अभिदाकृतिर्भिदाकृति-रचिदाकृतिरपि चिदाकृतिर्मातः ।
अनहन्ता त्वमहन्ता भ्रमयसि कामाक्षि शाश्वती विश्वम् ॥४७॥

அபிதாக்ருதிர் பிதாக்ருதி-
ரசிதாக்ருதிரபி சிதாக்ருதிர் மாத: |
அநஹந்தா த்வமஹந்தா
ப்ரமயஸி காமாக்ஷி சாச்வதீ விச்வம் ||

*மாத: காமாக்ஷி - ஜகன்மாதாவான ஹே காமாக்ஷி! சாச்வதீ த்வம் - அழிவில்லாத ஸ்வரூபத்தையுடைய நீ, அபிதாக்ருதி: - பேதமில்லாத ரூபத்தோடும், பிதாக்ருதி: - பேதங்களான ரூபங்களோடும், அசிதாக்ருதிரபி-சித்ரூபமாயில்லாமலும், சிதாக்ருதி:- சித்ஸ்வரூபிணியாயும், அநஹந்தா - அஹங்காரமில்லாதவளாயும், அஹந்தா - அஹங்காரஸ்வரூபிணியாயும் இருந்துகொண்டு, விச்வம் - ஜகத்தை, ப்ரமயஸி - சுழற்றிக்கொண்டிருக்கிறாய்.*

*இதிலும் இதற்கு முந்திய ச்லோகங்களிலும் சொல்லப்பட்டபடி அம்பிகையானவள் பலவிதமான குணங்களுடனும் பலவிதமான ரூபங்களுடனும் இருப்பதாகத்தோன்றிய போதிலும், பரமார்த்தத்தில் ஒருவளாகவே இருந்துகொண்டு வருவதை ஒரு நடிகையானவள் பல வேஷங்களைத் தரித்து நடிப்பதற்கு ஒப்பிட்டு "அம்பாஸ்தவ"த்தில் வர்ணித்திருக்கிறது.*

'தாக்ஷாயணீதி குடிலேதி குஹாரிணீதி
காத்யாயநீதி கமலேதி கலாவதீதி |
ஏகா ஸதீ பகவதீ பரமார்த்ததோऽபி
ஸந்த்ருச்யஸே பஹுவிதா நநு நர்த்தகீவ ||'

शिव शिव पश्यन्ति समं श्रीकामाक्षीकटाक्षिताः पुरुषाः ।
विपिनं भवनममित्रं मित्रं लोष्टं च युवतिबिम्बोष्ठम् ॥ ४८ ॥

சிவ சிவ பச்யந்தி ஸமம்
ஸ்ரீ காமாக்ஷீ-கடாக்ஷிதா: புருஷா: |
விபிநம் பவநம் அமித்ரம்
மித்ரம் லோஷ்டம் ச யுவதிபிம்போஷ்டம் ||

ஸ்ரீ காமாக்ஷீ கடாக்ஷிதா: புருஷா: - ஸ்ரீ காமாக்ஷியால் கடாக்ஷிக்கப்பட்டவர்கள், விபிநம் - காட்டை, பவநம் - வீடாகவும், அமித்ரம் - சத்ருவை, மித்ரம் - ஸ்நேஹிதனுகவும், யுவதி பிம்போஷ்டம் ச - யுவதிகளுடைய கோவைக்கனிபோன்ற அதரத்தையும், லோஷ்டம் - ஓட்டாஞ்சல்லிபோலும், ஸமம் பச்யந்தி - ஸமமாகப் பார்க்கிறார்கள். சிவ சிவ - அஹோ ஆச்சர்யம்!

அதாவது, ஸ்ரீ காமாக்ஷியின் கடாக்ஷம் பக்தன்மீது பட்டவுடன் அவனுக்கு ஸமத்ருஷ்டி ஏற்பட்டு, வீடு, காடு என்றாவது, மித்ரன், சத்ரு, என்றாவது, பேதமான பாவமில்லாதவனுக ஆகிவிடுகிறானென்று சொல்லப்பட்டது. அவனுக்கு ப்ரியம், அப்ரியம் என்ற இரண்டு சித்த வ்ருத்திகளும் இல்லாமல் போய் விடுவதால் அவன் யுவதிகளுடைய பிம்பபலம்போன்ற அதரத்தைக்கூட ஓட்டாஞ்சல்லிக்கு ஸமானமாக மதிப்பானென்று சொல்லப்பட்டது.

कामपरिपन्थिकामिनि कामेश्वरि कामपीठमध्यगते ।
कामदुघा भव कमले कामकले कामकोटि कामाक्षि ॥४९॥

காம பரிபந்த்தி காமிநி
  காமேச்வரி காமபீட மத்யகதே |
காம துகா பவ கமலே
  காமகலே காமகோடி காமாக்ஷி ||

காம பரிபந்த்தி காமிநி - மன்மதனுக்குச் சத்ருவான பரமசிவனுடைய நாயகியாயும், காமேச்வரி-காமேச்வரி (லலிதாம்பிகா) ஸ்வரூபிணியாயும், காமபீட மத்யகதே - காமராஜ பீடத்தின் மத்தியிலிருப்பவளாயும், கமலே-லக்ஷ்மீ ஸ்வரூபிணியாயும், காமகலே - காமகலா ஸ்வரூபிணியாயும், காமகோடி - காமகோடியென்ற பெயருள்ளவளாயுமிருக்கும், காமாக்ஷி - ஹே காமாக்ஷி தேவியே! காமதுகா பவ - (என்னுடைய) விருப்பங்களைக்கொடுப்பவளாய் ஆகுவாயாக.

1. அம்பிகை சிதக்னி குண்டத்திலிருந்து லலிதா தேவியாக ஆவிர்பவித்த பிறகு தேவர்கள் அவளை விவாஹம் செய்ய

*அவளுக்கு எவ்வகையிலும் தகுந்தவரான புருஷன் கிடைக்க வேண்டுமே என்ற கவலையோடிருக்கும்போது பரமேச்வரன் காமேச்வரரூபமாக,*

'கோடி கந்தர்ப்ப லாவண்ய யுக்தோ திவ்ய சரீரவாந் |
திவ்யாம்பரதர: ஸ்ரக்வீ திவ்யகந்தாநுலேபந: ||
கிரீடஹாரகேயூர குண்டலாத்யைரலங்க்ருத: |
ப்ராதுர்பபூவ புருஷோ ஜகந்மோஹந ரூபத்ருக் ||'

*என்றபடி அங்கு வந்ததாகவும், பிறகு இருவருக்கும் விவாஹ மான வ்ருத்தாந்தமும் லலிதோபாக்யானத்தில் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. காமேச்வரரைப் பதியாக அடைந்த தினால் லலிதாம்பிகைக்குக் காமேச்வரீ என்று பெயர் ஏற்பட்டது.*

2. *கமலா என்ற பதத்தினால் மஹாவிஷ்ணுவின் பத்னியான லக்ஷ்மீ ரூபமாக அம்பிகையிருப்பது சொல்லப்பட்டது. இது தவிர, லக்ஷ்மீ என்ற பெயரே அம்பிகைக்கு உண்டென்பதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.*

'தஸ்யாங்க மண்டலாரூடா சக்திர் மாஹேச்வரீ பரா |
மஹாலக்ஷ்மீரிதி க்யாதா ச்யாமா ஸர்வமநோஹரா ||'
**(விஷ்ணுபுராணம்)**

'ச்ரியம் லக்ஷ்மீம் அம்பிகாம் ஒளபலாங்காம் | '
**(ஆயுஷ்யஸூக்தம்)**

3. *பரப்ரம்ஹஸ்வரூபிணியான அம்பிகையானவள் சிவ சக்தி ஸாமரஸ்யரூபிணியானதாலும், அவ்வித ரூபத்தில் காமேச் வரரான சிவனானவர் ஒரு கோடியாக (ஏகதேசமாக) இருப்ப தாலும் அம்பிகைக்குக் காமகோடியென்று பெயர் ஏற்பட்டது. (காமனென்ற பதமானது காமேச்வரரைக் குறிக்கும்).*

4. *காஞ்சீபுரியிலிருக்கும் பிலத்திற்கே காமகோடியென்று பெயர். அது ஸர்வதீர்த்தத்திற்கு மூன்று அம்சம் ஈசான்ய பாகத்தில் ஸ்ரீ காமாக்ஷியின் ஆலயத்திற்குள்ளிருக்கிறது. அதற் குப் பலவிதமான பெயர்களுண்டு.*

**'ஜகத் காமகலாகாரம் பூமே: குண்டலீநீ பதம் |**
**... ... ... ... ... ... ... ... ...**
**தத் காமநகரம் திவ்யம் அகக்நம் ஸர்வஸித்திதம் |**

தப:ஸ்தாநம் பிலம் ஸூக்ஷ்மபரமம் வ்யோம தத் ஸ்ம்ருதம் ||
ஆதிபௌதிக மர்மாங்கம் நாபிஸ்தாநம் புவ: பரம் |
ததேவ ப்ரம்ஹண: சம்போ: சரீரமிதி கத்யதே ||
லோகாநாம் வ்யங்க்ய சப்தத்வாத் நாபிரித்யபி ஸஞ்ஜ்ஞிதம் |
ஸ்ரீபுரஸ்ய த்ரிமூர்த்தீநாம் ஈச்வராணாம் திசாமபி ||
லோகாநாம் மேருசைலஸ்ய கோரூபாயாவநேரபி |
நவத்வாரஸ்ய மார்க்கம் தம் பூயோநிஸ் தந் மஹாபிலம் ||'

5. *காமகோஷ்டம் (காமகோட்டம்) என்பது மேலேசொல்லிய காமகோடியென்ற பில மடங்கிய பெரிய ப்ரதேசத்திற்குப் பெயர். இது ருத்ரசாலைக்கும் விஷ்ணுசாலைக்கும் நடுவிலுள்ளது. பெரிய நான்கெல்லையையுடையது. இதற்கு பஞ்சபாண நிகேதனம் என்றும் பெயர் உண்டு. இது காஞ்சியின் மத்ய ப்ரதேசம். ஸ்ரீ காமாக்ஷியின் ஆலயம் அடங்கியது. இங்கு எவர்கள் தங்கள் இஷ்ட தேவதையின் மந்த்ரத்தை ஜபிக்கிறார்களோ அதற்குக் கோடிமடங்கான பலனை அடைவார்களென்றும், காமங்களை விரும்புவோர்கள் இவற்றைக் கோடிக்கணக்காக அடைவார்களென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.*

'ஏதத் சதுர்திங்மத்யஸ்த்தம் பஞ்சபாண நிகேதநம் |
தஸ்மாத் தத் காமகோஷ்டாக்யம் காஞ்ச்யாம் மத்யபூதலம்
யோ ஜபேத் காமகோஷ்டேஸ்மிந் மந்த்ரமிஷ்டார்த்ததைவதம்
கோடிவர்ணபலம் ப்ராப்ய முத்திலோகம் ச கச்சதி ||
காமாநாம் வர்ணதாத்பர்யாத் தத்கோடி குணஸங்க்யயா |
காமகோடீதி விக்யாதம் காமகோஷ்டதராதலம் ||'

6. *மேலே சொல்லிய பில ப்ரதேசத்திற்குக் காமகோடி யென்று பெயர் வந்ததற்கு அனேகம் காரணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. காமம் என்ற பதமானது பொதுவாக விருப்பத்தைக் (அதாவது, புருஷார்த்தத்தை) குறிக்கும். ஜனங்கள் விரும்பும் புருஷார்த்தங்கள் தர்ம, அர்த்த, காம, மோக்ஷங்களென்கிற நான்கு வகைப்பட்டனவாகச் சொல்லப்படும். இந்த வரிசையில் காமத்திற்கு அடுத்தாற்போல் (அடுத்த கோடியாக) மோக்ஷம் வருவதாலும், மோக்ஷமே (காமங்களுக்குள்) மற்ற புருஷார்த்தங்களைவிட உத்க்ருஷ்டமானதாலும் (பரமகோடியாயிருப்பதாலும்) காமகோடி என்ற பதமே மோக்ஷத்தையும் குறிக்கும்*

ஆகவே இந்தக்காமகோடி க்ஷேத்திரத்தில் ஒருவன் மேலேசொல்லிய காமங்களில் ஏதாவது ஒன்றையுத்தேசித்து உபாஸித்தாலும் அவனுக்கு அந்தக்காமமானது கோடிமடங்காகக் கிடைப்பதுடன் மற்ற புருஷார்த்தங்களும் கிடைத்து, கடைசியாக (காமகோடியாகிய) மோக்ஷமும் (அவன் உத்தேசிக்கவிட்டாலும்) அவனுக்குக் கிடைக்கப்பெறுமென்று சொல்லப்படுவதால் அந்த க்ஷேத்திரத்திற்குக்'காமகோடி' என்று பெயர் ஏற்பட்டது.

'யத்ர காமக்ருதோ தர்மோ ஜந்துநா யேந கேந வா |
ஸக்ருத்வாபி ஸுதர்மாணும் பலம் பலதி கோடிச:
தேநேதம் காமகோடீதி பீடத்வாரம் ப்ரஸித்திமத் ||
... ... ... ... ... ...
அத காமஸ் த்ருதீயார்த்த: புருஷார்த்தேஷு விச்ருத: |
தத் பரஸ்தாத் ச்ருதோ மோக்ஷ: கோடி சப்தேந சப்தித: ||
காமகோடி ச்ருதோ மோக்ஷ: புருஷார்த்த, சதுர்த்தக: |
அர்த்தோzதவா ச்ருத: காம: காமேசோ தந்த: ஸ்ம்ருத: |
தத்கோடிதா பீடசக்தி: காமகோடீதீ விச்ருதா ||'

7. அம்பிகையே அந்தக் காமகோடியெனப்படும் பிலாகாசஸ்வரூபிணியாயிருப்பதால் அந்தப்பெயரே அம்பிகைக்கும் ஏற்பட்டதென்று சொல்லப்படும்.

8. அம்பிகையின் ரூபங்கள் ஸ்தூல, ஸூக்ஷ்ம, பரரூபங்களென்ற மூன்றில் ஸ்தூலமென்பது கரசரணாதி அவயங்களையுடையது. ஸூக்ஷ்மமென்பது மந்த்ரமயமானது. பரமென்பது வாஸனாமயமானது. திருமபவும் ஸூக்ஷ்மரூபமானது ஸூக்ஷ்ம, ஸூக்ஷ்மதர, ஸூக்ஷ்மதமமென்பதாக மூன்று பிரிவையுடையது. ஸூக்ஷ்மமென்பது பஞ்சதசீ வித்யாரூபமானது. ஸூக்ஷ்மதரமென்பது காம கலாக்ஷரரூபமானது. ஸூக்ஷ்மதமமென்பது குண்டலினீ ரூபம்.

9. இந்தக் காமகலையானது மிகவும் ரஹஸ்யமானதால் அதினுடைய விபரங்களைக் குருமுகமாகவே அறிந்துகொள்ளவேண்டியது. ஆயினும் அவைகளைக் காமகலாவிலாஸம், என்ற க்ரந்தத்திலும் பாஸ்கரராயர், ஆர்தர் ஏவலன் முதலான பெரியோர்கள் எழுதிய க்ரந்தங்களிலும் பார்த்துத் தெரிந்துகொள்ளலாம்.

அம்பிகையின் காமகலா ஸ்வரூபமானது மூன்று பிந்துக்களும் ஹகாரார்த்தமும் சேர்ந்ததாகவும், அவையிருக்குமிடம்,

'அக்ர பிந்து பரிகல்பிதாநநாம்
அந்ய பிந்து ரசித ஸ்தநத்வயீம் |
நாதபிந்து ரசநா குணாஸ்பதாம்
நௌமி தே பரசிவே பராம் கலாம் ||'

என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்ரீமதாசார்யாளும் 'ஸௌந்தர்யலஹரீ'யில்

'முகம் பிந்தும் க்ருத்வா குசயுகம் அதஸ்தஸ்ய தததோ
ஹரார்தம் த்யாயேத் யோ ஹரமஹிஷி தே மன்மத கலாம் ||'

என்று சொல்லியிருக்கிறார்கள்.

मध्ये हृदयं मध्ये निटिलं मध्ये शिरोऽपि वास्तव्याम् ।
चण्डकरचक्रकार्मुक-चन्द्रसमाभां नमामि कामाक्षीम् ॥ ३० ॥

மத்யே ஹ்ருதயம் மத்யே நிடிலம்
மத்யே சிரோऽபி வாஸ்தவ்யாம் |
சண்ட-கர-சக்ர-கார்முக-
சந்த்ர-ஸமாபாம் நமாமி காமாக்ஷீம் ||

*மத்யே ஹ்ருதயம் - ஹ்ருதயத்தின் மத்தியிலும், மத்யே நிடிலம் - நெற்றியின் நடுவிலும், மத்யே சிரோऽபி - சிரஸின் நடுவிலும், (முறையே) சண்டகர - ஸூர்யன், சக்ர கார்முக — இந்த்ர தனுஸ், சந்த்ர - சந்த்ரன் (இவர்களுக்கு), ஸமாபாம் — ஸமமான காந்தியுடையவளாய், வாஸ்தவ்யாம் - இருப்பவளான, காமாக்ஷீம் - காமாக்ஷியை, நமாமி - நமஸ்கரிக்கிறேன்.*

*அம்பிகையானவள் பக்தனுடைய சரீரத்தில், சிரஸில் சந்த்ரன் போலவும், நெற்றியில் இந்த்ர தனுஸ் மாதிரியும், ஹ்ருதயத்தில் ஸூர்யன் போலவும், காந்தியோடிருப்பவளாக சொல்லப்பட்டிருக்கிறது. இதை ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில்,*

'சிரஸ்த்திதா சந்த்ரநிபா பாலஸ்த்தா இந்த்ர தநுஷ்ப்ரபா |
ஹ்ருதயஸ்த்தா ரவிப்ரக்யா ... ... ... ||'

*என்று சொல்லியிருக்கிறது. 'லகுஸ்துதி'யில் பின்வருமாறும் சொல்லப்பட்டிருக்கிறது:—*

ஐந்த்ரஸ்யேவ சராஸநஸ்ய தததீ
மத்யே லலாடம் ப்ரபாம்
சௌக்லீம் காந்திம் அநுஷ்ணகோரிவ
சிரஸ்யாதவந்தீ ஸர்வத: |
ஏஷாzஸௌ த்ரிபுரா ஹ்ருதி
த்யுதிரிவோஷ்ணாம்சோ: ஸதாzஹஸ்த்திதா
சிந்த்யான் ந: ஸஹஸா பதைஸ்
த்ரிபிரகம் ஜ்யோதிர்மயம் வாங்மயம்

अधिकाञ्चि केलिलोलैरखिलागमयन्त्रतन्त्रमन्त्रमयैः ।
अतिशीतं मम मानस-मसमशरद्रोहिजीवनोपायैः ॥ ५१ ॥

அதிகாஞ்சி கேளி லோலை:
அகிலாகம-யந்த்ர-தந்த்ர-மந்த்ர-மயை: |
அதிசீதம் மம மாநஸம்
அஸம-சர-த்ரோஹி-ஜீவநோபாயை: ||

அதிகாஞ்சி - காஞ்சீபுரியில், கேளிலோலை: - விளையாடுவதில் மிகவும் ப்ரியமுள்ளதாயும், அகில ஆகமயந்த்ர தந்த்ரமந்த்ரமயை:- எல்லா வேதங்களாயும், யந்த்ரங்களாயும், தந்த்ரங்களாயும், மந்த்ரங்களாயுமிருப்பதும், அஸமசர - மன்மதனுடைய, த்ரோஹி - சத்ருவான பரமசிவனுடைய, ஜீவநோபாயை: - ப்ராணனுக்கு ஆதாரமாயிருப்பதாயுமிருக்கிற ஒரு மூர்த்தியினால், மம மாநஸம்- என்னுடைய மனதானது, அதி சீதம்-மிகவும் குளிர்ந்திருக்கிறது.

'விஷமசர' என்ற பாடாந்தரத்திலும் மன்மதன் என்றுதான் அர்த்தம்.

नन्दति मम हृदि काचन मन्दिरयन्ती निरन्तरं काञ्चीम् ।
इन्दुरविमण्डलकुचा बिन्दुवियन्नादपरिणता तरुणी ॥ ५२ ॥

நந்ததி மம ஹ்ருதி காசந
மந்திரயந்தீ நிரந்தரம் காஞ்சீம் |
இந்து-ரவி-மண்டல-குசா
பிந்துவியந் நாத பரிணதா தருணீ ||

காஞ்சீம் - காஞ்சீபுரியை, நிரந்தரம் - எப்பொழுதும், மந்திரயந்தீ - வாஸஸ்தானமாக உடையவளும், இந்து ரவி மண்டல

குசா - சந்த்ர ஸூர்ய மண்டலங்களை ஸ்தனங்களாக உடையவளும், பிந்துவியந் நாத பரிணதா - பிந்து, (வியத்) ஆகாசம், நாதம் இம்மூன்று விதமான வேறு ரூபங்களையுடையவளுமான, காசந தருணீ - ஒரு யௌவன ஸ்திரீயானவள், மம ஹ்ருதி — என்னுடைய மனதில், நந்ததி - ஆனந்தத்தோடிருக்கிறாள்.

1. சந்த்ர ஸூரியர்கள் அம்பிகையினுடைய ஸ்தனங்களாகவும் நேத்ரங்களாகவும் (காதிலணிந்த) தாடங்கங்களாகவுமிருப்பதாகச் சொல்லப்படுவார்கள்.

'ஸூர்ய சந்த்ரௌ ஸ்தநௌ தேவ்யா: தாவேவ நயநே [ஸ்ம்ருதௌ |
உபௌ தாடங்கயுகளம் இத்யேஷா வைதிகீ ச்ருதி: ||'

2. வ்யோம, பிந்து, நாத — இவை நாதப்ரம்ஹ வித்யையில் சொல்லப்படும் பதங்கள். பரமசிவன் சுக்லபிந்து ரூபமாகவும் சக்தியானவள் சோணபிந்து ரூபமாகவுமிருப்பதாகவும், அவர்கள் பரஸ்பரம் ப்ரவேசிப்பதால் மிச்ரபிந்துவானது உண்டாகி அந்த பிந்துவிலிருந்து வ்யோமமும் நாதமும் ஏற்பட்டு அவற்றிலிருந்து ஸகல ஜகத்தும் உண்டாவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இதின் விபரங்களை 'காமகலாவிலாஸம்', 'சாரதாதிலகம்' முதலிய க்ரந்தங்களில் பார்க்கவும். இம்மூன்றும் அம்பிகையின் பரிணாமங்களென்று சொல்லப்பட்டிருக்கிறது.

'வ்யோமேதி பிந்துரிதி நாத இதீந்துலேகா-
ரூபேதி வாக்பவதநூரிதி மாத்ருகேதி |
நி:ஸ்யந்தமாந ஸுகபோத ஸுதாஸ்வரூபா
வித்யோததே மநஸி பாக்யவதாம் ஜநாநாம் ||'
(அம்பாஸ்தவம்)

शम्पालतासवर्णं सम्पादयितुं भवज्वरचिकित्साम् ।
लिम्पामि मनसि किञ्चन कम्पातटरोहि सिद्धभैषज्यम् ॥ ५३ ॥

சம்பா-லதா-ஸவர்ணம்
ஸம்பாதயிதும் பவஜ்வர-சிகித்ஸாம் |
லிம்பாமி-மநஸி கிஞ்சந
கம்பாதட-ரோஹி ஸித்த-பைஷஜ்யம் ||

பவஜ்வர சிகித்ஸாம்-ஸம்ஸாரமாகிற ஜ்வரத்திற்குச் சிகித்ஸை யை, ஸம்பாதயிதும் - அடைவதற்காக, சம்பா-லதா-ஸவர்ணம் - மின்னல்கொடிபோன்ற நிறமுள்ளதும், கம்பா-தட-ரோஹி - கம்பா நதிக்கரையில் முளைத்ததுமான, கிஞ்சந - ஒரு, ஸித்த பைஷஜ்யம் - ஸித்தௌஷதத்தை, மனஸி - மனதில், (மனதால்) சிம்பாமி - பூசிக்கொள்ளுகிறேன் (சிந்திக்கின்றேன்).

1. ஸம்ஸாரமாகிற ஜ்வரத்தைப்போக்கும் ஸித்தௌஷத மாக அம்பிகை இங்கு வர்ணிக்கப்பட்டாள். அந்த ஸித்தௌஷதம் மின்னல்கொடிபோன்ற ரூபத்தையுடையது. அது (கொடியென்ற உபமானத்தை மேலும் அனுஸரித்து) கம்பாநதிக்கரையில் படர்ந் தது. இப்பேற்பட்ட ஔஷதத்தை (ஸாதாரணமான ஜ்வரங்களைப் போக்குவதற்கு ஔஷதங்களை மேலே பூசுவதுமாதிரி) தான் மனதால் பூசிக்கொண்டதாக கவி இங்கு வர்ணிப்பதினால், தான் அந்த ஔஷதத்திற்கு உபமிக்கப்பட்ட அம்பிகையை மனதால் எப்போதும் த்யானம் செய்வதாகச் சொல்லப்பட்டது.

2. சம்பா என்றால் மின்னல். மின்னலாவது கொடிபோல் தோன்றுவதால் அது லதையாகச் சொல்லப்பட்டது.

अनुमितकुचकाठिन्या-मधिवक्षःपीठमङ्गजन्मरिपोः ।
आनन्ददां भजे ता-मानङ्गब्रह्मतत्त्वबोधिसिराम् ॥ ५४ ॥

அநுமித குச காடிந்யாம்
அதிவக்ஷ: பீடம் அங்கஜந்மரிபோ: |
ஆநந்ததாம் பஜே தாம்
ஆநங்க-ப்ரும்ஹ-தத்வ-போதி-ஸிராம் ||

அநுமித குச காடிந்யாம் - ஊஹித்தறியவேண்டிய காடின் யத்தையுடைய (உறுதியுடையுடைய) ஸ்தனங்களையுடையவளும், அங்க ஜன்ம ரிபோ: — மன்மதனுடைய சத்ருவான பரமசிவ னுடைய, அதி வக்ஷ: பீடம் - மனதில் (மனத்திற்கு), ஆனந்த தாம் - ஆனந்தத்தைக் கொடுப்பவளும், ஆநங்க ப்ரம்ஹதத்வ - காம சாஸ்திரத்தை, போதி ஸிராம்-போதிக்கும் நாடியாயுமுள்ள, தாம் - அந்த ஸ்ரீகாமாக்ஷியை, பஜே - பஜிக்கிறேன்.

[அங்கமென்றால் மனது என்றர்த்தம். காமமானது மனதிலிருந்து உண்டாவதால் மன்மதனை மனதிலிருந்து பிறந்தவனாக அங்கஜனென்றும் மனஸிஜனென்றும் சொல்வது வழக்கம்.

அங்க ஜன்ம ரிபோ: - மன்மத சத்ருவான பரமசிவனுடைய, அதி வக்ஷ: பீடம் - மார்பாகும் பீடத்தின்கண், அநுமித குச காடிந்யாம் - ஊஹித்து அறியக்கூடிய ஸ்தநங்களின் காடின்யத்தையுடையதும், ஆனந்தத்தைத் தருவதான ச்ருங்காரப்ரம்மத்துவத்தைத் தெரிவிக்கும் நாடியான அந்த காமாக்ஷியை நான் பஜிக்கின்றேன். அம்பாளுடைய குச காடிந்யம் பரமசிவனின் மார்பினால் தான் அறியக்கூடியது என்பது பொருள்.] ௫௫

ऐक्षिषि पाशाङ्कुशधर-हस्तान्तं विस्मयार्हवृत्तान्तम् ।
अधिकाञ्चि निगमवाचां सिद्धान्तं शूलपाणिशुद्धान्तम् ॥५५॥

ஐக்ஷிஷி பாசாங்குசதர –
ஹஸ்தாந்தம் விஸ்மயார்ஹ வ்ருதாந்தம் |
அதிகாஞ்சி நிகமவாசாம்
ஸித்தாந்தம் சூலபாணி சுத்தாந்தம் ||

பாசாங்குசதர ஹஸ்தாந்தம் - பாசம், அங்குசம் இவற்றைக் கைகளிலுடையவளும், விஸ்மயார்ஹ வ்ருத்தாந்தம் - ஆச்சர்யப் படத்தக்க சரித்திரத்தையுடையவளும், நிகமவாசாம் - வேத வாக்யங்களுக்கு (அதாவது வேதங்களுக்கு), ஸித்தாந்தம் - முடிவான தாத்பர்யமாயிருப்பவளுமான, சூலபாணி சுத்தாந்தம்-பரம சிவனுடைய அந்தப்புரமான ஸ்ரீ காமாக்ஷியை, அதிகாஞ்சி – காஞ்சீபுரியில், ஐக்ஷிஷி - பார்த்தேன்.

" விஸ்மயார்ஹ வ்ருத்தாந்தம் "— இதேமாதிரி " அத்புத சாரித்ரா " என்று ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்தில் ஒரு நாமமிருக்கிறது. இதனால் அம்பிகையைப்பற்றிய பண்டாஸுர வதம், மஹிஷாஸுர வதம் முதலியவைகள் சொல்லப்பட்டன. அத்துடன் குறிப்பாக ஸ்ரீ காமாக்ஷியால் செய்யப்பட்ட தபஸ், பந்தகாஸுரவதம், ஸ்வர்ண காமாக்ஷி ப்ராதுர்பாவம் முதலிய (ஸ்ரீகாமாக்ஷீ விலாஸத்தில் சொல்லப்பட்ட) வ்ருத்தாந்தங்களும் குறிக்கப்பட்டன.

आहितविलासभङ्गी-माब्रह्मस्तम्बशिल्पकल्पनया ।
आश्रितकाञ्चीमतुला-माद्यां विस्फूर्तिमाद्रिये विद्याम् ॥ ५६ ॥

ஆஹித விலாஸ பங்கீம்
ஆப்ரம்ஹ-ஸ்தம்ப சில்ப கல்பநயா |
ஆச்ரித காஞ்சீம் அதுலாம்
ஆத்யாம் விஸ்பூர்த்திம் ஆத்ரியே வித்யாம் ||

ஆப்ரம்ஹ ஸ்தம்ப - ப்ரம்ஹா முதல் புழு முடிய எல்லா ஜீவன்களையும், சில்ப கல்பநயா - ஸ்ருஷ்டிப்பதனால், ஆஹித விலாஸ பங்கீம் - செய்யப்பட்ட தன் லீலைகளின் பேதங்களை யுடையவளும், ஆச்ரித காஞ்சீம் - காஞ்சீபுரியை அடைந்தவளும், அதுலாம் - ஒப்பற்றவளும், ஆத்யாம் விஸ்பூர்த்திம் - ப்ரம்ஹத்தின் முதன் முதலான உணர்ச்சியாயிருப்பவளுமான, வித்யாம் - வித்யா (ஞான) ரூபிணியை, ஆத்ரியே - ஆச்ரயிக்கிறேன்.

1. அம்பிகையானவள் ஸகல ஜீவன்களுடைய ஸ்ருஷ்டிக்கும் காரணமாயிருப்பதால் 'ஆப்ரம்ஹகீடஜநநீ' என்றும், 'ஆப்ரம்ஹாதி பிபீலிகாந்த ஜநநீ' என்றும் இங்கு சொல்லப்பட்டது மாதிரி வர்ணிப்பது வழக்கம். ப்ரம்ஹா என்ற பதமானது ஸகல ஜீவன்களுடைய ஸ்தூலசரீரங்களின் ஸமஷ்டி ரூபமான ஹிரண்ய கர்ப்பரைக் குறிக்கும். ஜீவன்களுக்குள் முக்யமான அவரையும், ஜீவன்களில் கடைசியாக இருக்கும் புழு, எறும்பு முதலியவற்றையும் சொல்லியிருப்பதால் நடுவாக இருக்கும் ஸகல ஜீவன்களும் சேர்த்துச் சொல்லப்பட்டார்கள். ஸ்தம்பமென்பது அதீந்த்ரியமானதும் (இந்த்ரியங்களுக்குத் தென்படாததும்), வைத்ய சாஸ்த்ரங்களில் கசேருகம், மசேருகம் என்று இரு பெயர்களால் சொல்லப்படுவதுமான புழுப்போன்ற ஜீவ விசேஷம்.

2. ப்ரளயகாலத்தின்போது(மறுபடியும் ஜனிக்கவேண்டிய) ஸகல ஜீவன்களையும் தன்னிடம் அடக்கிக்கொண்டு ப்ரம்ஹமானது ஸ்வாத்மாராமமாய் இருக்கும்போது, அவ்விதமான ஜீவன்களுடைய கர்ம வாஸனையால் திரும்பவும் ஸ்ருஷ்டியுண்டாகவேண்டிய காலம் வந்தவுடன், அப்படி ஸ்ருஷ்டிக்கவேண்டுமென்பதான ஒரு உணர்ச்சியானது ப்ரம்ஹத்தினிடம் உண்டாகிறது. இதுவே ச்ருதியில் 'ஸோZகாமயத' என்பது முதலான

வாக்கியங்களினால் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதமான உணர்ச்சியை ஸ்புரணம், ஸ்பூர்த்தி, ஸ்பந்தம் என்று சொல்வது வழக்கம். இது (பாலானது காய்ச்சப்படும்போது) பொங்குவதற்கு முன்னால் இருக்கும் தோற்றத்திற்கு (கொதிப்புக்கு) உபமிக்கப்படும். இந்த ஸ்பூர்த்தியானது மாயையின் (அம்பிகையின்) கார்யமானதால் அதையே அம்பிகையின் ரூபமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதுவே ஸ்ருஷ்டிக்கு முதல் முதலாக ஏற்படுவதால் 'ஆத்யாம் விஸ்பூர்த்திம்' என்று இங்கு சொல்லப்பட்டது.

मूकोऽपि जटिलदुर्गति-शोकोऽपि स्मरति यः क्षणं भवतीम् ।
एको भवति स जन्तु-र्लोकोत्तरकीर्तिरेव कामाक्षि ॥ ५७ ॥

மூகோऽபி ஜடில துர்கதி-
சோகோऽபி ஸ்மரதி ய: க்ஷணம் பவதீம் |
ஏகோ பவதி ஸ ஜந்து:
லோகோத்தர கீர்த்திரேவ காமாக்ஷி ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷியே! ய: - எவனொருவன், மூகோऽபி - ஊமையாயிருந்தபோதிலும், ஜடில துர்கதி சோகோऽபி — மிகவும் சிக்கலான கஷ்டங்களால் துக்கப்படுகிறவனாயிருந்த போதிலும், பவதீம் - உன்னை, க்ஷணம் ஸ்மரதி - ஒரு க்ஷண நேரம் ஸ்மரித்தானேயாகில், ஸ ஏகோ ஜந்து: ஏவ - அவன் ஒருவன் மட்டுமே, லோகோத்தர கீர்த்தி: - லோகத்தில் மிகவும் மேன்மையான கீர்த்தியுடையவனாக, பவதி - ஆகிறான்.

எந்த ஜந்து உம்மை ஒரு க்ஷணம் நினைக்கின்றதோ, அந்த ஜந்து ஊமையாயினும் அடர்ந்த அக்ஞானத்தால் நேர்ந்த துக்கத்தால் சோகமுற்றதாயினும் உலகத்தில் சிறந்த கீர்த்தியுள்ள ஒப்பற்றதாக ஆகிறது என்றும் பொருள் சொல்லலாம்.

पञ्चदशवर्णरूपं कंचन काञ्चीविहारधौरेयम् ।
पञ्चशरीयं शंभो-र्वञ्चनवैदग्ध्यमूलमवलम्बे ॥ ५८ ॥

பஞ்சதச வர்ண ரூபம்
கஞ்சந காஞ்சீ விஹார தௌரேயம் |
பஞ்சசரீயம் சம்போ:
வஞ்சந வைதக்த்ய மூலம் அவலம்பே ||

பஞ்சதசவர்ணரூபம் — பஞ்சதசாக்ஷரீ ரூபமுடையதும், காஞ்சீ விஹார தௌரேயம் - காஞ்சீ பட்டணத்தில் விளையாடுவதில் முன்னிற்பதும், சம்போ: வஞ்சந வைதக்த்ய மூலம் - பரமசிவனை வஞ்சிப்பதில் (மோஹிப்பதில்) ஸாமார்த்தியத்திற்கு மூலமானதும், பஞ்ச சரீயம் - மன்மதனைச் சேர்ந்ததான (காமரூபிணியான), கஞ்சந-ஒரு மூர்த்தியை, அவலம்பே-சரணமடைகிறேன்.

பஞ்சதசாக்ஷரீ (ஸ்ரீ) வித்யையானது அம்பிகையின் சரீரமாயிருப்பது,

'ஸ்ரீமத் வாக்பவ கூடைக ஸ்வரூப முக பங்கஜா |
கண்டாத: கடிபர்யந்த மத்யகூட ஸ்வரூபிணீ |
சக்தி கூடைகதாபந்ந கட்யதோ பாகதாரிணீ ||'

என்ற 'ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம'த்திய நாமங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

[பஞ்சசரீயம் - மன்மதனுடையதான, சம்போ: - பரமசிவனை வஞ்சந வைதக்த்ய மூலம் - மயக்கும் ஸாமார்த்தியத்துக்குக் காரணமான, கஞ்சந - ஒரு தேவதையை, அவலம்பே - சரணம் அடைகிறேன். பரமசிவனை மயக்கும் மன்மத ஸாமார்த்தியத்துக்குக் காரணமான காமாக்ஷியைச் சரணமடைகிறேன் — என்றும் பொருள் சொல்லலாம்.]

परिणतवतीं चतुर्धा पदवीं सुधियां समेत्य सौषुम्नीम् ।
पञ्चाशदर्णकल्पित-पदशिल्पां तां नमामि कामाक्षीम् ॥ ५९ ॥

பரிணதவதீம் சதுர்த்தா
பதவீம் ஸுதியாம் ஸமேத்ய ஸௌஷும்நீம் |
பஞ்சாசதர்ண கல்பித-
பதசில்பாம் தாம் நமாமி காமாக்ஷீம் ||

ஸுதியாம் - ஞானவான்களுடைய, ஸௌஷும்நீம் பதவீம் - ஸுஷும்நா மார்க்கத்தை, ஸமேத்ய - அடைந்து, சதுர்தா - நான்கு விதமாக, பரிணதவதீம் - பேதங்களையடைந்திருப்பவளாயும், பஞ்சாசதர்ண கல்பித - ஐம்பது அக்ஷரங்களாலாகிய, பதசில்பாம் - பதங்களின் ரூபமாயிருப்பவளுமான, தாம் காமாக்ஷீம் - அந்த காமாக்ஷீ தேவியை, நமாமி - நமஸ்கரிக்கிறேன்.

1. *முந்திய ச்லோகத்தில் அம்பிகை ஸ்ரீ வித்யாரூபிணியா யிருப்பதைச் சொல்லிவிட்டு, இந்த ச்லோகத்தில் சப்தரூபிணியா யிருப்பதைச் சொல்லுகிறார். சப்தமானது (வாக்கானது) பரா, பச்யந்தீ, மத்யமா, வைகரீ என்று நான்கு வகைப்படும். நாதமானது மூலாதாரத்தில் இருக்கும்போது பரா என்ற பெயரோடிருக்கும், அங்கிருந்து ஸுஷும்நா மார்க்கமாக மேலேவருகையில் ஸ்வாதிஷ்டானத்திற்கு வரும்போது பச்யந்தீ என்றும், அநாஹதத்திற்கு வரும்போது மத்யமா என்றும், அதற்கு மேலாக விசுத்தி ஸ்தானமான கண்டத்தின் மூலமாய் வெளி வரும்போது மத்யமா என்றும் பெயர்கள்.*

> 'மூலாதாரே ஸமுத்பந்ந: பராக்யோ நாத ஸம்பவ: |
> ஸ ஏவோர்த்வதயாநீத: ஸ்வாதிஷ்டாநே விஜ்ரும்பித: ||
> பச்யந்த்யாக்யாம் அவாப்நோதி ததைவோர்த்வம் சனை:சனை:|
> அநாஹதே புத்தி தத்வ ஸமேதா மத்யமாபித: ||
> ததா தயோர்த்வ நுந்நஸ் ஸந் விசுத்தௌ கண்டதேசத: |
> வைகர்யாக்ய: ... ... ... ... ||'

*இதையே ஸ்ரீமதாசார்யாளும்,*

> 'மூலாதாராத் ப்ரதமமுதிதோ யச்ச பாவ: பராக்ய:
> பச்சாத் பச்யந்த்யத ஹ்ருதயகோ புத்தியுக் மத்யா மாக்ய: |
> வ்யக்தே வைகர்யத ருருதிஷோஸ் தஸ்ய ஜந்தோ: [ஸுஷும்நா
> பக்தஸ் தஸ்மாத் பவதி பவந ப்ரேரிதா வர்ணஸம்ஞா ||'

*என்பதாக 'ப்ரபஞ்சஸார'த்தில் சொல்லியிருக்கிறார்கள்.*

2. *இந்த வைகரீ என்ற வாக்கானது நாம் ஸாதாரணமாகப் பேசுவது. இதையே தான் வாக்கென்று தெரியாதவர்கள் சொல்வார்களே தவிர, அறிஞர்கள் வாக்கானது மேலே சொல்லியபடி நான்குவகைப்பட்டதென்றும் அவற்றில் கடைசியானது தான் வைகரீ வாக்கென்றும் சொல்லுவார்கள்.*

> 'சத்வாரி வாக் பரிமிதா பதாநி
> தாநி விதுர் ப்ராஹ்மணா யே மநீஷிண: |
> குஹா த்ரீணி நிஹிதா நேங்கயந்தி
> துரீயம் வாசோ மனுஷ்யா வதந்தி ||'

3. வைகரீ வாக்கானது அ முதல் க்ஷ வரையிலுள்ள ஐம்பது அக்ஷரங்களாலும் அவற்றின் சேர்க்கைகளான பதங்களாலும் உண்டாவது. அது இங்கு 'பஞ்சாசதர்ண கல்பித பத ஸில்பாம்' என்று சொல்லப்பட்டது. வர்ணங்கள் அ முதல் க்ஷ வரையில் இருப்பதால் பஞ்சாசத் வர்ணங்களையும் (வைகரீ வாக்கையும்) அக்ஷமாலை என்று சொல்லுவது வழக்கம்.

'பரா பூஜங்ம பச்யந்தீ வல்லீ குச்சஸமுத்பவா |
மத்யமா ஸௌரபா வைகர்யக்ஷமாலா ஜயத்யஸௌ ||'

4. இந்த நாலுவிதமான வாக்குகளும் அம்பிகையின் ரூபங்களென்பதாக,

'பரா ப்ரத்யக்சிதீ ரூபா பச்யந்தீ பரதேவதா |
மத்யமா வைகரீ ரூபா ... ... ... ||'

என்பதாக 'ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம'த்தில் சொல்லப்பட்டது.

இதைப்பற்றி அதிகமாகத் தெரிந்துகொள்ளவிருப்பமுள்ளவர்கள் பாஸ்கரராயருடைய ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாஷ்யம்* காம கலாவிலாஸம், சாரதா திலகம், ஆர்தர் ஏவலனுடைய க்ரந்தங்கள் முதலியவற்றைப் பார்க்கவும்.

आदिक्षन्मम गुरुराडा दिक्षान्ताक्षरात्मिकां विद्याम्।
स्वादिष्ठचापदण्डां नेदिष्ठामेव कामपीठगताम् ॥ ६० ॥

ஆதிக்ஷத் மம குருராட்
ஆதி க்ஷாந்தாக்ஷராத்மிகாம் வித்யாம் |
ஸ்வாதிஷ்ட சாபதண்டாம்
நேதிஷ்டாமேவ காமபீடகதாம் ||

மம குருராட் - என்னுடைய குருநாதனானவர், ஸ்வாதிஷ்ட - மிகவும் இனிப்பான, சாபதண்டாம் - (கரும்பு) வில்லையுடையவளும், காமபீடகதாம் - காமகோடிபீடத்திலிருப்பவளும், ஆதி-

*இப்பாஷ்யத்திற்கு தமிழில் அர்த்த வ்யாக்யானங்களுடன் கூடிய மொழி பெயர்ப்பு ஸ்ரீமான் G. V. கணேசய்யரால் எழுதப்பட்டு, ஸ்ரீ ஜனார்த்தன அச்சுக்கூடத்தாரால் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. சுமார் 1000 பக்கங்கள் கொண்டது விலை ரூ. 10—0—0

அ முதலாக, க்ஷாந்த - க்ஷ முடிவாகவுள்ள, அக்ஷராத்மிகாம் — அக்ஷரங்களின் ஸ்வரூபமாயுள்ள, வித்யாம் - வித்யாரூபிணியுமான ஸ்ரீ காமாக்ஷியை, நேதிஷ்டாம் ஏவ - மிகவும் ஸமீபத்திலிருப்பவளாகவே, ஆதிக்ஷத் - காட்டினார் (உபதேசித்தார்).

அதாவது, தன் குருநாதருடைய அனுக்ரஹத்தினால் வித்யா ரூபிணியான ஸ்ரீ காமாக்ஷியின் தர்சனம் தனக்குக்கிடைத்ததாகச் சொல்லுகிறார்.

तुष्यामि हर्षितस्मर-शासनया काञ्चिपुरी कृतासनया ।
स्वासनया सकलजग-द्भासनया कलितशम्बरासनया ॥ ६१ ॥

துஷ்யாமி ஹர்ஷிதஸ்மர-
சாஸநயா காஞ்சிபுரி(ர) க்ருதாஸநயா |
ஸ்வாஸநயா ஸகல ஜகத்-
பாஸநயா கலித சம்பராஸநயா ||

ஹர்ஷிதஸ்மரசாஸநயா-ஸ்மரனை (மன்மதனை) த்தண்டித்தவரான பரமசிவனை ஸந்தோஷப்படுத்தியவளும், காஞ்சிபுரி - காஞ்சீபுரியில், க்ருதாஸநயா - வாஸஸ்தானத்தையுடையவளும், ஸ்வாஸநயா - தன்னிடமே நிலையோடிருப்பவளும், ஸகல ஜகத் பாஸநயா - ஸகல ஜகத்தையும் ப்ரகாசத்தோடு இருக்கச் செய்பவளும் கலித சம்பராஸநயா - மன்மதன் (திரும்பவும்) உண்டாகும்படி செய்தவளுமான (ஸ்ரீ காமாக்ஷியால்), துஷ்யாமி - ஸந்தோஷப் படுகிறேன்.

1. ஜகத்திலுள்ள எல்லா வஸ்துக்களும் ப்ரம்ஹத்தினிடம் நிலையோடிருக்கையில், ப்ரம்மமானது தன்னிடமே நிலைத்திருப்பதாகச் சொல்லப்படும். இப்படி தான் நிலைத்திருப்பதற்குப் பிற வஸ்துக்களை அபேக்ஷிக்காமல் தன்னிடமே ப்ரதிஷ்டிதமாக ப்ரம்ஹமிருப்பது 'ஸ்வாஸநயா' என்ற பதத்தினால் இங்கு குறிக்கப் பட்டது.

2. சம்பரன் என்ற மஹா மாயாவியான அஸுரனை மன்மதன் ஸம்ஹாரம் செய்ததால் அவனுக்கு சம்பராஸனன் என்று பெயர். அவனை அம்பாள் உஜ்ஜீவிக்கச் செய்தது 'கலித சம்பராஸநயா' என்பதால் சொல்லப்பட்டது.

3. சம்பாமென்றால் மிகவும் சிரேஷ்டமானது என்றும் அர்த்தமுண்டு. ஸர்வோத்க்ருஷ்டமான ஆஸனமான காமகோடி பீடத்தில் அம்பிகை இருப்பதை 'கலித சம்பாராலயா' என்று சொன்னதாகவும் சொல்லலாம்.

प्रेमवती कम्पायां स्थेमवती यतिमनःसु भूमवती ।
सामवती नित्यगिरा सोमवती शिरसि भाति हैमवती ॥ ६२ ॥

ப்ரேமவதீ கம்பாயாம்
ஸ்தேமவதீ யதிமன:ஸு பூமவதீ |
ஸாமவதீ நித்யகிரா
ஸோமவதீ சிரஸி பாதி ஹைமவதீ ||

ஹைமவதீ - ஹிமவானுடைய பெண்ணான காமாக்ஷியானவள், கம்பாயாம் - கம்பாநதியிடத்தில, ப்ரேமவதீ - ப்ரியமுள்ளவளாயும், யதிமன:ஸு - யதிகளுடைய மனதுகளில், ஸ்தேமவதீ - ஸ்திரமான நிலையோடிருப்பவளும், பூமவதீ - ஐச்வர்யம் (மஹிமை) பொருந்தியவளும், நித்யகிரா - அழிவில்லாத வாக்காகிய வேதங்களால், ஸாமவதீ - புகழப்பட்டவளும், சிரஸி-சிரஸில், ஸோமவதீ - சந்திரனையுடையவளுமாக, பாதி - விளங்குகிறாள்.

कौतुकिना कम्पायां कौसुमचापेन कीलितेनान्तः ।
कुलदैवतेन महता कुड्मलमुद्रां धुनोतु नः प्रतिभा ॥ ६३ ॥

கௌதுகிநா கம்பாயாம்
கௌஸுமசாபேந கீலிதேநாந்த: |
குலதைவதேந மஹதா
குட்மள முத்ராம் துநோது ந: ப்ரதிபா ||

கம்பாயாம் கௌதுகிநா - கம்பா நதியில் (கம்பாநதீ தீரத்தில் இருப்பதில்) உத்ஸாஹத்தோடு கூடியதும், அந்த: - உள்ளுக்குள் (மனதில்), கௌஸுமசாபேந - மன்மதனால், கீலிதேந - செய்யப்பட்ட அடையாளத்தோடு கூடியதுமான (அதாவது, ச்ருங்கார ரஸம் நிரம்பிய மனதையுடையதுமான), மஹதா குலதைவதேந - உயர்ந்த ஸர்வோத்க்ருஷ்டமான) குலதெய்வத்தினால், ந: ப்ரதிபா - நம்முடைய புத்தியானது, குட்மள முத்ராம் துநோது - அரும்பின் நிலைமைமாறி மலர்ச்சியடையட்டும்.

1. மன்மதன் புஷ்பங்களாலாகிய தனுஸ்ஸை உடையவளு கையால் இங்கு 'கௌஸுமசாபோ' என்று சொல்லப்பட்டது.

2. மலரும் தருணத்திலிருக்கும் மொட்டுக்குக் குட்மளம் என்று பெயர்.

கௌஸும சாபோ - புஷ்ப பாணங்களையுடைய வில்லைத் தரித்துள்ளதும், அல்லது; புஷ்பங்களையே வில்லாகக்கொண்டதும், அந்த: கிலிதோ - எனது உள்ளத்தில் உறைந்திருப்பதும் — என்றும் பொருள் சொல்லலாம்.

केनापि मिलितदेहा यूना स्वाहासहायतिलकेन ।
सहकारमूलदेशे संविद्रूपा कुटुम्बिनी रमते ॥ ६४ ॥

கேநாபி மிளித தேஹா
யூநா ஸ்வாஹாஸஹாய திலகேந!
ஸஹகார மூலதேசே
ஸம்வித்ரூபா குடும்பிநீ ரமதே ॥

ஸம்வித்ரூபா - ஞான ரூபிணியான, குடும்பிநீ - ஒரு குல ஸ்திரீயானவள், ஸ்வாஹா ஸஹாய - அக்னியை, திலகேந - திலகமாகவுடைய (அதாவது அக்னியை நெற்றிக்கண்ணாக உடைய), கேநாபி யூநா - யாரோ ஒரு (வர்ணிக்க முடியாத) யௌவன புருஷனுடன், மிளிததேஹா - சேர்ந்ததான சரீரத்தையுடையவளாய், ஸஹகார மூல தேசே - ஆம்ரமரத்தின் மூலப்ரதேசத்தில் (அடியில்), ரமதே - ரமித்துக்கொண்டிருக்கிறாள்.

1. இங்கு சிவதம்பதிகளுடைய அர்த்தநாரீசுவர ஸ்வரூபமானது 'மிளிததேஹா' என்பதினால் சொல்லப்பட்டது.

2. அக்னியினுடைய பத்னிக்கு ஸ்வாஹா என்று பெயராகையால் இங்கு 'ஸ்வாஹா ஸஹாய' என்பதால் அக்னி சொல்லப்பட்டான்.

कुसुमशरगर्वसंपत्-कोशगृहं भाति काञ्चिमध्यगतम् ।
स्थापितमस्मिन्कथमपि गोपितमन्तर्मया मनोरत्नम् ॥ ६५ ॥

குஸுமசர கர்வ ஸம்பத்—
கோசக்ருஹம் பாதி காஞ்சிமத்யகதம் |
ஸ்தாபிதம் அஸ்மின் கதமபி
கோபிதம் அந்தர்மயா மநோரத்னம் ||

*குஸுமசர - புஷ்பங்களைப் பாணங்களாகக்கொண்ட மன்மதனுடைய, கர்வஸம்பத் - கர்வமாகிய தனத்தின், கோசக்ருஹம் - பொக்கிஷமானது, காஞ்சிமத்யகதம் - காஞ்சீபுரியின் நடுவிலிருந்துகொண்டு, பாதி - விளங்குகிறது. அஸ்மின் ஸ்தாபிதம் - அதில் ஸ்தாபிக்கப்பட்டதாயிருக்கும், மநோரத்னம் - என் மனோரத்னமானது, மயா - என்னால், அந்த: - என் மனத்திற்குள், கதமபி கோபிதம் - எப்படியோ காப்பாற்றப்பட்டுவருகிறது.*

*காஞ்சிமத்யகதமான காமகோடி பீடமானது மன்மதனுடைய கர்வத்திற்குக் காரணமாயிருக்கும் காமத்திற்கு பொக்கிஷம்போல் விளங்குகிறதென்றும், அதில் ஸ்தாபிக்கப்பட்ட மூர்த்தியான ஸ்ரீ காமாக்ஷியானவள் ஒரு ரத்னம்போல் தன் மனதில் விளங்கிக் கொண்டு தன்னால் எப்போதும் காப்பாற்றப்பட்டு (அதாவது, த்யானிக்கப்பட்டு) வருகிறாள் என்றும் கவியால் சொல்லப்பட்டது. அவ்விதமான கோசக்ருஹத்திற்குள் ஸ்தாபிதமான (ஸ்ரீ காமாக்ஷியாகிற) ரத்னத்தைத் தான் கொண்டுவந்து தன் மனதிற்குள் வைத்து எப்படியோ காப்பாற்றிவருவதாக வர்ணித்திருக்கிறார்.*

*அஸ்மிந் - அந்தப் பொக்கிஷத்தில், மநோரத்நம் - என் மனதென்னும் ரத்னமானது, கதமபி - மிகவும் சிரமப்பட்டு, கோபிதம் - பத்திரப்படுத்தப்பட்டிருக்கின்றது — என்றும் பொருள் சொல்லலாம்.*

दग्धषडध्वारण्यं दरदलितकुसुम्भसंभृतारुण्यम् ।
कलये नवतारुण्यं कम्पातटसीम्नि किमपि कारुण्यम् ॥ ६६ ॥

தக்த ஷடத்வாரண்யம்
தரதளித குஸும்ப ஸம்ப்ருதாருண்யம் |
கலயே நவ தாருண்யம்
கம்பா தடஸீம்நி கிமபி காருண்யம் ||

*தக்த ஷடத்வாரண்யம் - ஆறு அத்வாக்களாகிய ஆரண்யத்தை எரித்ததும் (அதாவது, அவற்றைக் கடந்ததும்), தரதளித-*

கொஞ்சம் மலர்ந்ததான, குஸும்ப-குங்குமப்பூவின், ஸம்ப்ருத-சேர்க்கையான, ஆருண்யம் - சிகப்பு நிறத்தையுடையதும், நவ தாருண்யம்-புதிதான (ஆரம்பித்ததான) யௌவனத்தையுடையது மான, இமம் காருண்யம் - ஏதோ ஒரு கருணைரூபிணியை, கம்பா தடஸீம்நி - கம்பா நதிக்கரையில், கலயே - அறிகிறேன் (த்யானிக்கிறேன்.)

1. ஜகத்தானது ஷட் (ஆறு வகையான) அத்வாக்களாய் (வழிகளாய்) சித்ரூபிணியான அம்பிகையிடமிருந்து ஏற்படுகிறது என்று சொல்லப்படுகிறது.

'வர்ண: கலா பதம் தத்வம் மந்த்ரோ புவநமேவ ச |
இத்யத்வ ஷட்கம் தேவேசி பாதி த்வயி சிதாத்மநி || '

2. இந்த ஆறு அத்வாக்களில் வர்ண, பத, மந்த்ரமென்பவைகள் வாக்கைச் சேர்ந்தவைகளென்றும், கலா, தத்வ, புவனமென்றவைகள் அர்த்தத்தைச் சேர்ந்தவைகளென்றும், அந்த வாக்கும் அர்த்தமும் முறையே ப்ரகாச, விமர்சாத்மகமானவையென்றும், அவற்றிலிருந்து இந்த ஜகத்தானது ஏற்படுகிறதென்றும் சொல்லப்படும்.

3. அம்பிகை இந்த ஆறு அத்வாக்களுக்கும் அப்பாலிருப்பதை, 'ஷடத்வாதீத ரூபிணீ' என்று 'ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம'த்தில் சொல்லியிருக்கிறது.

4. அல்லது, காம, க்ரோத, லோப, மோஹ, மத, மாத்ஸர்யங்களென்ற ஷட்ரிபுக்களை 'ஷடத்வா' என்ற பதத்தினால் குறிப்பிட்டதாகவும் சொல்லலாம். அவை காட்டிலுள்ள மரங்கள் மாதிரி மேலுக்குமேல் உண்டாவதால் அவற்றை ஒரு அரண்யத்திற்கு ஸமானமாக வர்ணிப்பது வழக்கம். அம்பிகையின் அனுக்ரஹம் ஏற்பட்டால் அவை நசித்துவிடுவதால் 'தக்த ஷடத்வாரண்யம்' என்று சொல்லப்பட்டது.

5. இதேமாதிரி 'ஸகல ஜனனீஸ்தவ'த்திலும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

'ஷடத்வாரண்யாநீம் ப்ரளய ரவி கோடி ப்ரதிருசா
ருசா பஸ்மீக்ருத்ய ஸ்வபத கமல ப்ரஹ்வ சிரஸாம் |

விதங்வாநः சைவம் கிமபி வபுரிந்தீவரருசி:
குசாப்யாம் ஆநம்ரஸ்தவ புருஷகாரோ விஜயதே ॥

**अधिकाञ्चि वर्धमाना-मतुलां करवाणि पारणामक्ष्णोः ।**
**आनन्दपाकभेदा-मरुणिमपरिणामगर्वपल्लविताम् ॥ ६७ ॥**

அதிகாஞ்சி வர்தமாநாம்
அதுலாம் கரவாணி பாரணாம் அக்ஷ்ணோ: ।
ஆநந்த பாக பேதாம்
அருணிம பரிணாம கர்வபல்லவிதாம் ॥

***அதிகாஞ்சி - காஞ்சிபுரியில், வர்தமாநாம் - விருத்திபடைகிற தாயும், (அதாவது, விளங்குகிறதாயும்) அதுலாம் - தனக்கு ஸமானமில்லாததாயும், ஆனந்த பாகபேதாம்-ஆனந்தம் நிறைந்த ரூபத்தையுடையதாயும், அருணிமபரிணாம கர்வபல்லவிதாம்-அதிக மான சிகப்பானது வளர்ந்தோங்கிய துளிர்போலிருப்பதாயு முள்ள ஒரு மூர்த்தியை, அக்ஷ்ணோ:பாரணாம் கரவாணி - என் கண்ணாரப் பார்க்கிறேன்.***

**बाणसृणिपाशकार्मुक-पाणिममुं कमपि कामपीठगतम् ।**
**एणधरकोणचूडं शोणिमपरिपाकभेदमकलये ॥ ६८ ॥**

பாண ஸ்ருணி பாச கார்முக
பாணிம் அமும் கமபி காமபீடகதம் ।
ஏணதர கோண சூடம்
சோணிம பரிபாக பேதம் ஆகலயே ॥

***பாண ஸ்ருணி பாச கார்முக - (புஷ்ப) பாணம், அங்குசம், பாசம், (இக்ஷு) கோதண்டம் இவற்றையுடைய, பாணிம் - கையையுடையதும், காமபீடகதம் - காமகோடி பீடத்திலிருப்பதும், ஏணதரகோண சூடம் - மானைத் தரிக்கும் சந்த்ரனுடைய கலையை சிரஸில் தரித்ததும், சோணிமபரிபாக பேதம் - உயர்ந்ததான சிகப்பு நிறத்தோடு கூடியதுமான, அமும் - இந்த, கமபி - ஒரு மூர்த்தியை, ஆகலயே - த்யானிக்கிறேன்.***

***ஏணமென்றால் மான் என்று அர்த்தம். சந்த்ர மண்டலத் திலிருக்கும் களங்கத்தை மானென்று வர்ணிப்பது கவி வழக்கமா கையால் சந்த்ரனுக்கு ஏணதரனென்று பெயர் சொல்லப்படும்.***

**किं वा फलति ममान्यै-र्बिम्बाधरचुम्बिमन्दहासमुखी ।**
**संबाधकरी तमसा-मम्बा जागर्ति मनसि कामाक्षी ॥ ६९ ॥**

கிம் வா பலதி மமாந்யை:
பிம்பாதர சும்பி மந்தஹாஸமுகீ |
ஸம்பாதகரீ தமஸாம்
அம்பா ஜாகர்த்தி மநஸி காமாக்ஷீ ||

*பிம்பாதர சும்பி - கோவைக் கனிபோன்ற அதரங்களில் பரவும், மந்தஹாஸ முகீ - புன்சிரிப்போடு கூடிய முகத்தையுடையவளும், தமஸாம் ஸம்பாதகரீ - அக்ஞானத்தை அறவே போக்கடிப்பவளுமான, அம்பா காமாக்ஷீ - தாயாரான காமாக்ஷியானவள், மனஸி - என்னுடைய மனதில், ஜாகர்த்தி - விளங்கிக்கொண்டிருக்கிறாள், அந்யை: - பிறரால், மம - எனக்கு, கிம் வா பலதி - என்ன காரியம் ஆகவேண்டியிருக்கிறது. ஒன்றுமில்லையென்று கருத்து.*

**मञ्चे सदाशिवमये परशिवमयललितपौष्पपर्यङ्के ।**
**अधिचक्रमध्यमास्ते कामाक्षी नाम किमपि मम भाग्यम् ॥७०॥**

மஞ்சே ஸதாசிவமயே
பரசிவ மய லலித பௌஷ்ப பர்யங்கே |
அதிசக்ரமத்யம் ஆஸ்தே
காமாக்ஷீ நாம கிமபி மம பாக்யம் ||

*காமாக்ஷீ நாம - காமாக்ஷீ என்ற பெயரோடு கூடிய, கிமபி - ஏதோ ஒரு, மம பாக்யம் - என்னுடைய பாக்யமானது, அதிசக்ர மத்யம் - ஸ்ரீ சக்ரத்தின் மத்தியில், ஸதாசிவமயே மஞ்சே - ஸதாசிவனாகிற மஞ்சத்தில் (கட்டிலில்), பரசிவமய - பரசிவனாகிய லலித - அழகான, பௌஷ்ப பர்யங்கே - புஷ்ப மெத்தையின் மீது, ஆஸ்தே - விளங்கிக்கொண்டிருக்கிறது.*

1. *ஸ்ரீ சக்ரத்தின் நடுநாயகமாக விளங்கும் ஸர்வானந்தமய சக்ரமென்ற பிந்து இங்கு 'அதிசக்ரமத்யம்' என்பதால் சொல்லப்பட்டது. அதில் பஞ்சப்ரம்ஹாகாரமான மஞ்சத்தில் காமேச்வரரும் அவருடைய வாமாங்கத்தில் ஸ்ரீ லலிதாதாம்பிகையும் இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.*

"ஸதநஸ்யோபரி தாஸாம் ஸர்வானந்தமய நாமகே பிந்தௌ |
பஞ்சப்ரம்ஹாகாரம் மஞ்சம் ப்ரணமாமி மணிகளுகீர்ணம் ||'

*இந்த மஞ்சத்திற்கு ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன், ஈச்வரன் இந்நால்வரும் கால்களாயிருப்பதாகச் சொல்லப்படுவார்கள்.*

பர்யங்கஸ்ய பஜாம: பாதாந் பிம்பாம்புதேந்துஹேமருச: |
அஜஹரிருத்ரேசமயாந் அநலாஸுர மாருதேசகோண
ஸ்த்தாந் ||'

*இந்த மஞ்சத்திற்கு ஸதாசிவன் மேல் தட்டாயிருப்பதாகச் சொல்லப்படும்.*

'பலகம் ஸதாசிவமயம் ப்ரணௌமி ஸிந்தூர ரேணு கிரணாபம் |'

*மேலே சொல்லிய ஐவரும் தங்களுடைய சக்திகளோடு இல்லாதிருக்கும்போது ப்ரேதங்களாக இருக்கிறபடியால் அவர்களாலான கட்டிலானது 'பஞ்சப்ரேத மஞ்சம்' என்று சொல்லப்படும். (இதைப்பற்றி அதிகமாகத் தெரியவேண்டுமானால் ஞானார்ணவம் முதலியவற்றைப் பார்க்கவும்).*

2. *இந்த மஞ்சத்தைப் பொதுவாக 'மஞ்சே ஸதாசிவமயே' என்று இங்கு சொல்லியதுபோல் 'சிவாகாரே மஞ்சே' என்று 'ஸௌந்தர்யலஹரி'யிலும் சொல்லப்பட்டிருக்கிறது.*

3. *இப்பேர்ப்பட்ட மஞ்சத்தின்மீது காமேச்வாருடைய வாமாங்கத்தில் அம்பிகை வீற்றிருப்பதால் அவ்விதமான அவருடைய (அழகியதும் புஷ்பம்போல் ம்ருதுவானதுமான) அங்கமானது 'பரமசிவ மய லலித பௌஷ்ப பர்யங்கே' என்று இங்கு சொல்லப்பட்டது. இதே மாதிரி ஸ்ரீ மதாச்சார்யாளும்,*

'சிவாகாரே மஞ்சே பரமசிவ பர்யங்க நிலயாம்'

*என்று 'ஸௌந்தர்யலஹரி'யில் வர்ணித்திருக்கிறார்கள்.*

लक्ष्योऽसि कामपीठी-लासिकया घनकृपाम्बुराशिकया ।
श्रुतियुवतिकुन्दलीमणि-मालिकया तुहिनशैलबालिकया ॥७१॥

லக்ஷ்யோऽஸ்மி காமபீடீ—
லாஸிகயா கநக்ருபாம்பு ராசிகயா |
ச்ருதியுவதி குந்தளீமணீ—
மாலிகயா துஹிநசைல பாலிகயா ||

**காமபீட லாஸிகயா - காமபீடத்தில் நர்த்தனம் செய்கிற வளும், கக்ருபாம்பு ராசிகயா - கனீபூதமான கருணாரஸத்தின் ஸமுத்ரமாக விளங்குபவளும், ச்ருதியுவதி - வேதங்களாகிற யுவதிகளின், குந்தளீ மணிமாலிகயா - கேசங்களில் அணிந்திருக்கும் ரத்னங்களின் மாலைபோன்றவளும், துஹிந சைல பாலிகயா - ஹிமவானுடைய குமாரியாயுமிருக்கிற ஸ்ரீ காமாக்ஷியால், லக்ஷ்யோZஸ்மி - பார்க்க (காப்பாற்ற)த்தக்கவனுயிருக்கிறேன்.**

1. *லாஸிகா என்பது நர்த்தனம்செய்யும் ஸ்திரீக்குப்பெயர்.*

2. *அம்பிகையானவள் ஸகல வேதங்களுக்கும் பரம தாத்பர்யமாயிருப்பதால், வேதங்களை ஸ்திரீகளாகவும், அம்பிகையை அவர்களுடைய சிரஸில் கேசங்களிலணிந்திருக்கும் ரத்னங்களின் கோர்வையாகவும் இங்கு வர்ணிக்கப்பட்டன. அம்பிகையை அந்த ஸ்திரீகள் இடைவிடாமல் நமஸ்கரிப்பதால் அவளுடைய பாதங்களின் (செம்பஞ்சுக்குழம்பு கலந்ததால் சிகப்பாயிருக்கும்) தூளிகள் அவர்களுடைய வகுட்டிலணியப்பட்ட ஸிந்தூரமாயிருப்பதாக,*

'ச்ருதி ஸீமந்த ஸிந்தூரீ க்ருத பாதாப்ஜ தூளிகா'

*என்று ஸ்ரீ லலிதாஸஹஸ்ரநாம'த்தில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.*

लीये पुरहरजाये माये तव तरुणपल्लवच्छाये ।
चरणे चन्द्राभरणे काञ्चीशरणे नतार्तिसंहरणे ॥ ७२ ॥

லீயே புரஹரஜாயே
மாயே தவ தருண பல்லவச்சாயே |
சரணே சந்த்ராபரணே
காஞ்சீசரணே நதார்த்திஸம்ஹரணே ||

*புரஹர ஜாயே - முப்புரங்களையும் அழித்தவரான பரமசிவனுடைய பத்னியே, மாயே - மஹாமாயாரூபிணியே, தருணபல்லவச்சாயே - இளந்துளிர் போன்ற (சிவந்த) காந்தியுடையவளே, சந்த்ராபரணே - சந்த்ரனை (சிரஸின்) ஆபரணமாக உடையவளே, காஞ்சீ சரணே - காஞ்சீபுரியை வாஸஸ்தானமாக உடையவளே, நதார்த்தி ஸம்ஹரணே - நமஸ்கரிக்கின்றவர்களுடைய கஷ்டத்தைப் போக்குகிறவளே, தவ சரணே - உன்னுடைய பாதத்தில், லீயே - லயித்திருக்கிறேன்.*

*இங்கு வந்த பதங்களில் 'தருணபல்லவச்சாயே', 'காஞ்சீசரணே', 'நதார்த்திஸம்ஹரணே' என்றவைகள் அம்பாளுடைய சரணத்தைப்பற்றிச் சொன்னதாகவும் சொல்லலாம். இதர தேவதைகள் போலல்லாமல் அம்பாள் தன்னுடைய சரணங்களாலேயே பக்தர்களுடைய பயத்தைப்போக்க வேண்டிய அளவுக்கு மிஞ்சி அனுக்ரஹம் செய்யும் மஹிமை வாய்ந்தவளென்பதாக ஸ்ரீ மதாசார்யாள் 'ஸௌந்தர்யலஹரி'யில் வர்ணித்திருக்கிறார்கள்.*

'த்வதந்ய: பாணிப்யாம் அபயவரதோ தைவதகண:
த்வமேகா நைவாஸீ: ப்ரகடித வராऽபீத்யபிநயா |
பயாத் த்ராதும் தாதும் பலமபி ச வாஞ்ச்சா ஸமதிகம்
சரண்யே லோகாநாம் தவ ஹி சரணாவேவ நிபுணௌ ||'

मूर्तिमपि मुक्तिबीजे मूर्ध्निस्तबकितचकोरसांराज्ये ।
मोदितकम्पाकूले मुहुर्मुहुर्मनसि मुमुदिषाऽस्माकम् ॥ ७३ ॥

மூர்த்திமதி முக்திபீஜே
மூர்த்நி ஸ்தபகித சகோர ஸாம்ராஜ்யே |
மோதித கம்பா கூலே
முஹு꞉ர் முஹு꞉ர்மநஸி முமுதிஷாऽஸ்மாகம் ||

*மூர்த்திமதி - உருவத்தோடு கூடிய, முக்திபீஜே - முக்திக்கு வித்தாயிருப்பவளும் (அதாவது முக்திக்கு வித்தே உருவெடுத்தாற் போலிருப்பவளும்), மூர்த்நி - சிரஸில், ஸ்தபகித சகோர ஸாம்ராஜ்யே-சகோரங்களுக்கு ஸாம்ராஜ்யமான சந்த்ரனைச் செண்டு போல் அணிந்திருப்பவளும், மோதித கம்பா கூலே - கம்பா நதியின் கரையிலிருப்பதற்கு ப்ரியமுள்ளவளுமான ஒரு மூர்த்தியிடத்தில், முமுதிஷா - ஆனந்தமடைய வேண்டுமென்ற ஆசையானது, அஸ்மாகம் மநஸி - நம்முடைய மனதில், முஹு꞉: முஹு꞉: - அடிக்கடி (மேலுக்குமேல்), உண்டாகிறது.*

*சகோர பக்ஷியானது சந்த்ரனுடைய நிலவையே ஆஹாரமாக உடையதென்பதாகச் சொல்லப்படுமாதலால் சந்த்ரனைச் சகோரங்களுக்கு ஸாம்ராஜ்யமாகச் சொல்லப்பட்டது.*

वेदमयीं नादमयीं बिन्दुमयीं परपदोद्यदिन्दुमयीम् ।
मन्त्रमयीं तन्त्रमयीं प्रकृतिमयीं नौमि विश्वविकृतिमयीम् ॥७४॥

வேதமயீம் நாதமயீம்
பிந்துமயீம் பரபதோத்யத் இந்துமயீம் |
மந்த்ரமயீம் தந்த்ரமயீம்
ப்ரக்ருதிமயீம் நௌமி விச்வ விக்ருதிமயீம் ||

*வேதமயீம் - வேதங்களின் ரூபமாயும், நாதமயீம் - நாத ஸ்வரூபிணியாயும், பிந்துமயீம் - பிந்து ஸ்வரூபிணியாயும், பரபதோத்யத் - மோக்ஷத்தில் உதிக்கும், இந்துமயீம் - சந்த்ரரூபிணியாயும், மந்த்ரமயீம் - மந்த்ரரூபிணியாயும், தந்த்ரமயீம் - தந்த்ர ரூபிணியாயும், ப்ரக்ருதிமயீம் - ப்ரக்ருதி ரூபிணியாயும், விச்வ விக்ருதிமயீம் - ஜகத்திலுள்ள எல்லாவற்றையும் தன்னுடைய பரிணாமங்களாயுடையவளுமான ஸ்ரீ காமாக்ஷியை, நௌமி—நமஸ்கரிக்கிறேன்.*

1. *பரப்ரம்ஹமானது ஸ்ருஷ்டிக்கு உன்முகமாக ஆகும் போது தன்னுடைய விமர்சரூபமான சக்தியிலிருந்து மஹாபிந்துவாக ஆவிர்பவித்து அதிலிருந்து நாதமும், அதிலிருந்து ஸகல ப்ரபஞ்சமும் ஏற்படுவதாகச் சொல்லப்படுகிறது.*

'பரசிவ ரவிகர நிகரே ப்ரதிபலதி விமர்ச தர்பணே விசதே |
ப்ரதிருசிருசிரே குட்யே சித்தமயே நிவிசதே மஹாபிந்து: ||
ஸ்புரிதாத் அருணத்பிந்தோ: நாதப்ரம்ஹாங்குரோ ரவோ
[வ்யக்த: |
தஸ்மாத் ககந ஸமீரணதஹநோதக பூமி வர்ண ஸம்பூதி: ||

2. *இவ்விதமாக ஏற்படும் விச்வமானது (ப்ரபஞ்சமானது) ப்ரக்ருதிமயியான (ஆதிகாரண வஸ்துவான) அம்பாளுடைய விக்ருதியாக (பரிணாமமாக) இருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. எப்படிப் பாலிலிருந்து தயிரும், வெண்ணெயும், நெய்யும், விகாரங்களாக (வேறு ரூபங்களாக) ஏற்படுகின்றனவோ, அம்மாதிரி ஸகல ப்ரபஞ்சமும் அம்பாளுடைய விகாரங்களாய் இருப்பதாக சாக்தர்களால் சொல்லப்படும். (இது பரிணாமவாதமென்று சொல்லப்படும்). இது சாக்தர்களுடைய ஸித்தாந்தம்.*

पुरमथनपुण्यकोटी पुञ्जितकविलोकसूक्तिरसधाटी ।
मनसि मम कामकोटी विहरतु करुणाविपाकपरिपाटी ॥७५॥

புரமதந புண்யகோடீ
　　புஞ்ஜித கவிலோக ஸூக்தி ரஸதாடீ |
மநஸி மம காமகோடீ
　　விஹரது கருணா விபாக பரிபாடீ ||

*புரமதந - புரங்களை அழித்த பரமசிவனுடைய, புண்யகோடீ- புண்ணியத்தின் எல்லையாயிருப்பவளும் (அதாவது, அவர் செய்த பாக்யத்தால் கிடைக்கப்பெற்றவளும்), புஞ்ஜித கவிலோகஸூக்தி ரஸதாடீ - கவிலோகத்தினுடைய (கவிகளுடைய) வாக்குகளின் ரஸங்களுடைய சேர்க்கையான ரூபமாயிருப்பவளும், (அதாவது, கவிகளுடைய உயர்ந்ததான வாக்குக்களால் ஸ்துதி செய்யப்பட்டவளும்), கருணாவிபாக பரிபாடீ - அதிகமான கருணையே உருவெடுத்தாற்போல் இருப்பவளுமான, காமகோடீ - ஸ்ரீ காமாக்ஷியானவள், மம மநஸி - என்னுடைய மனதில், விஹரது - விளையாடிக்கொண்டிருக்கட்டும்.*

कुटिलं चटुलं पृथुलं मृदुलं कचनयनजघनचरणेषु ।
अवलोकितमवलम्बित-मधिकम्पातटममेयमस्माभिः ॥ ७६ ॥

குடிலம் சடுலம் ப்ருதுளம்
　　ம்ருதுளம் கச நயந ஜகந சரணேஷு |
அவலோகிதம் அவலம்பிதம்
　　அதிகம்பாதடம் அமேயம் அஸ்மாபி: ||

*கச நயந ஜகந சரணேஷு - கூந்தல்களிலும், கண்களிலும், நிதம்ப ப்ரதேசத்திலும், சரணங்களிலும், குடிலம் சடுலம் ப்ருதுளம் ம்ருதுளம் - (முறையே) வளைந்தும், சஞ்சலத்தோடும், பருத்தும், ம்ருதுவாயும் இருக்கிற, அமேயம்-அளவிடமுடியாத (அதாவது, மனதிற்கு எட்டாததான) ஒரு மூர்த்தியானது, அஸ்மாபி:- நம்மால், அதிகம்பாதடம் - கம்பா நதிக்கரையில், அவலோகிதம்- பார்க்கப்பட்டது, அவலம்பிதம் - சரணமடையப்பட்டது.*

*கசங்களில் குடிலமாயும், நயனங்களில் சடுலமாயும், ஜகனத்தில் ப்ருதுளமாயும், சரணங்களில் ம்ருதுளமாயும் அம்பிகையின்*

ரூபமிருப்பதாக இதில் வர்ணிக்கப்பட்டது. இதேமாதிரி ஸ்ரீ மதாசார்யாளும்,

'அராளா கேசேஷு ப்ரக்ருதிஸரளா மந்தஹஸிதே
சிரீஷாபா சித்தே த்ருஷதுபல சோபா குசதடே |
ப்ருசம் தந்வீ மத்யே ப்ருதுருரஸிஜாரோஹவிஷயே
ஜகத் த்ராதும் சம்போர் ஜயதி கருணா காசிதருணா ||'

என்று 'ஸௌந்தர்யலஹரி'யில் வர்ணித்திருக்கிறார்கள்.

प्रत्यङ्मुख्या दृष्ट्या प्रसाददीपाङ्कुरेण कामाक्ष्याः ।
पश्यामि निस्तुलमहो पचेलिमं किमपि परशिवोल्लासम् ॥७७॥

ப்ரத்யங் முக்யா த்ருஷ்டியா
ப்ரஸாத தீபாங்குரேண காமாக்ஷ்யா: |
பச்யாமி நிஸ்துலமஹோ
பசேளிமம் கிமபி பரசிவோல்லாஸம் ||

காமாக்ஷ்யா:-காமாக்ஷியினுடைய, ப்ரஸாத தீபாங்குரேண—அனுக்ரஹமாகிற தீபச்சுடரால் (உண்டான), ப்ரத்யங்முக்யா—அந்தர்முகமான, த்ருஷ்ட்யா - பார்வையால், நிஸ்துலம் - இணையற்றதும், பசேளிமம் - பழுத்ததுமான, கிமபி - ஒரு (வர்ணனையிலடங்காத), பரசிவோல்லாஸம் - பரமசிவனுடைய உல்லாஸத்தை (ஸ்வரூபத்தை, அதாவது மோக்ஷானந்தத்தை), பச்யாமி - பார்க்கிறேன்.

அம்பிகையின் அனுக்ரஹத்தால் சிவஞானம் ஏற்படுவதாக ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமத்திலும் 'சிவஞான ப்ரதாயினீ' என்று சொல்லப்படுகிறது.

विद्ये विधातृविषये कात्यायनि कालि कामकोटि कले ।
भारति भैरवि भद्रे शाकिनि शांभवि शिवे स्तुवे भवतीम् ॥७८॥

வித்யே விதாத்ரு விஷயே
காத்யாயநி காமகோடி கலே |
பாரதி பைரவி பத்ரே
சாகிநி சாம்பவி சிவே ஸ்துவே பவதீம் ||

வித்யே - (வித்யா ரூபிணியான) ஸரஸ்வதி ரூபத்தையுடையவளே, விதாத்ரு விஷயே - (அந்த ஸரஸ்வதீ ரூபத்தில்)ப்ரம்ஹாவின் காந்தையாயிருப்பவளே, காத்யாயநி காளி காமகோடி கலே பாரதி பைரவி பத்ரே சாகிநி சாம்பவி சிவே - காத்யாயனீ, காளீ, காமகோடி, கலா, பாரதீ, பைரவி, பத்ரா, சாகினீ, சாம்பவீ, சிவா என்ற பெயர்களையுடையவளே, பவதீம் - உன்னை, ஸ்துவே-ஸ்துதி செய்கிறேன்.

அம்பிகையானவள் தேவர்களுக்கு ஒத்தாசைசெய்யவேண்டி காத்யாயன மஹர்ஷியுடைய ஆச்ரமத்தில் ஆவிர்பவித்து அவரால் தன் பெண்ணாக ஸ்வீகரிக்கப்பட்டதினால் காத்யாயனீ என்று பெயர் ஏற்பட்டது. காளீ என்ற நாமம் அம்பாளுக்கு ஏற்பட்டதற்கு அனேகம் காரணங்களுண்டு. கருப்பு வர்ணமாய் இருப்பதையும், காலத்திற்கு அதீதமாயிருப்பதையும் இந்தப்பெயருக்கு இரண்டு காரணங்களாகச் சொல்லலாம். 'காலாத்மிகா' 'கலாநாதா' 'கலாமாலா' 'கலாவதீ' என்ற ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமத்திய நாமங்களின் பாஷ்யத்தில் கலா என்ற பதத்திற்கு அனேக அர்த்தங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவைகளின் ரூபமாக அம்பிகையிருப்பதால் கலா என்ற பெயர் ஏற்பட்டது. வித்யா, விதாத்ருவிஷயா, பாரதீ என்றவை ஸரஸ்வதியின் பெயர்கள். பைரவராகிய சிவனுடைய பத்னியாக இருப்பதாலும் பீருக்கள் (ஸ்த்ரீகள்) ஸமூஹ ரூபமாயிருப்பதாலும் அம்பிகைக்கு பைரவீ என்ற பெயர் ஏற்பட்டது. மங்கள ரூபிணியாயும் மங்கள் ப்ரதையாயுமிருப்பதால் பத்ரா என்று பெயர். சாகினீ என்பது மூலாதார பத்மத்திலிருக்கும் (அம்பிகையின் ரூபிணியான) யோகினிக்குப்பெயர். தவிரவும் தேவீமாஹாத்ம்யம், தேவீபாகவதம் இவற்றில் சொல்லப்பட்ட(அம்பிகா ரூபிணியான) சாகம்பரீ தேவியைக் குறித்ததாகவும் சொல்லலாம். சாம்பவீ, சிவா என்பவை சம்பு, சிவன் என்ற சிவனுடைய பெயர்களிலிருந்து ஏற்பட்டவை.

"विद्ये विधातृ विषये" (வித்யே விதாத்ரு அவிஷயே) என்ற பாடத்தில் சதுர்முக ப்ரம்ஹாவின் ஸிருஷ்டிக்கு அதீதமான வித்யா ஸ்வரூபிணியே—என்பது பொருள்.

मालिनि महेशचारिणि काञ्चीकेलिनि विपक्षकालिनि ते ।
शूलिनि विद्रुमशालिनि सुरजनपालिनि कपालिनि नमोऽस्तु ॥७९॥

மாலிநி மஹேச சாரிணி
காஞ்சீ கேலிநி விபக்ஷகாலிநி தே |
சூலிநி வித்ருமசாலிநி
ஸுரஜந பாலிநி கபாலிநி நமோऽஸ்து ||

**மாலிநி - மாலினியாயும், மஹேசசாரிணி - பரமசிவனுடைய பத்னியாயும், காஞ்சீ கேலிநி - காஞ்சீபுரியில் விளையாடிக்கொண்டிருப்பவளாயும், விபக்ஷகாலிநி - சத்ருக்களை ஸம்ஹாரம் செய்பவளாயும், சூலிநி - சூலத்தைத் தரித்தவளாயும், வித்ருமசாலிநி- பவழம் போன்ற நிறத்துடன் விளங்குகிறவளாயும், ஸுரஜன பாலிநி - தேவர்களைக் காப்பாற்றுகிறவளாயும், கபாலிநி—கபாலத்தைக் கையில் வைத்திருப்பவளாயுமிருக்கும், தே - உனக்கு, நம: அஸ்து - நமஸ்காரம் இருக்கட்டும்.**

மாலையைத் தரித்திருப்பதாலும், பஞ்சாசத் வர்ணங்களாலான (அக்ஷரங்களாலான) மாலையை (வர்ணமாலையை) தரித்திருப்பதாலும (அதாவது அக்ஷர ஸ்வரூபிணியாக) இருப்பதாலும் அம்பிகைக்கு மாலினீ என்று பெயர். அம்பிகை தனது ரூப விசேஷங்களில் சூலம், கபாலம், இவற்றைக் கைகளில் தரித்திருப்பதால் சூலினீ என்றும், கபாலினீ என்றும் பெயர்கள் ஏற்பட்டன. பரமசிவனும் கையில் கபாலத்தைத் தரித்திருப்பதால் அவருக்குக் கபாலியென்றும் அவருடைய பத்னியாகிய அம்பிகைக்கும் கபாலினியென்றும் பெயர் ஏற்பட்டதாகவும் சொல்லலாம்.

"महेश चालिनि" (மஹேசசாலிநி) என்ற பாடத்தில், பரமேசுவரனையும் சலிக்கச் செய்பவளாயிருப்பவளே — என்பது பொருள்.

*காமாக்ஷி - ஹே காமாக்ஷியே! சூலபாணே: - பரமசிவனுடைய, காமாகம தந்த்ர யக்ஞ தீக்ஷாயாம் - காம சாஸ்த்திரத்தை அப்யஸிப்பதாகிய யாகத்திற்கு தீக்ஷையடைவதில், தவ - உன்னுடைய, தாத்ருக் - அப்பேர்ப்பட்ட (விசேஷமான), தத்-அந்த, தருணிமோந்மேஷ: - யௌவனத்தின் விகாஸமானது, தேசிக: கிம் இதி-குருவா என்ன என்று, சங்கே-ஸந்தேஹப்படுகிறேன்.*

*காமாகம ஸமயயஜ்ஞ - என்றும் பாடம். "தேசிகதி கிமேஷ சிவே" என்ற பாடாந்தரத்தில், ஏ சிவே! - மங்களரூபிணியான காமாக்ஷியே! ஏஷ: - இந்த, தருணிமோந்மேஷ: - யௌவனத்தின் விகஸமானது, தேசிகதி - ஆசாரியனாக இருக்கிறது என்று நினைக்கிறேன்—என்பது பொருள்.*

वेदण्डकुम्भडम्बरवैदण्डिककुचभरार्तमध्याय ।
कुङ्कुमरुचे नमस्यां शङ्करनयनामृताय रचनामः ॥ ८१ ॥

வேதண்ட கும்ப டம்பர
வைதண்டிக குச பரார்த்த மத்யாய |
குங்கும ருசே நமஸ்யாம்
சங்கர நயநாம்ருதாய ரசயாம: ||

*வேதண்ட - யானையின், கும்ப - கும்பங்களின், டம்பர — ஆடம்பரத்தோடு, வைதண்டிக - விதண்டாவாதம்போல் போர் செய்யும், (அதாவது—யானையின் மஸ்தகத்தைத் தோற்கச்செய்யும்படியான), குச பரஆர்த்த - ஸ்தனங்களின் பாரத்தினால் கஷ்டப்படும், மத்யாய - இடுப்பை உடையவளும், குங்கும ருசே — குங்குமம் (குங்குமப்பூ) போன்ற காந்தியுடையவளும், சங்கரநயநாம்ருதாய - பரமசிவனுடைய நேத்ரங்களுக்கு அம்ருதம்போன்றவளுமான ஸ்ரீ காமாக்ஷிக்கு, நமஸ்யாம் ரசயாம: - நமஸ்காரத்தைச் செய்கிறோம்.*

अधिकाञ्चितमणिकाञ्चन-काञ्चीमधिकाञ्चि काञ्चिदद्राक्षम् ।
अवनतजनानुकम्पा-मनुकम्पाकूलमस्मदनुकूलाम् ॥ ८२ ॥

அதிகாஞ்சித மணிகாஞ்சந
காஞ்சீம் அதிகாஞ்சி காஞ்சித் அத்ராக்ஷம் |
அவநத ஜநாநுகம்பாம்
அநுகம்பாகூலம் அஸ்மத் அநுகூலாம் ||

*அதிக அஞ்சித - அதிகமாக இழைக்கப்பட்ட, மணி-ரத்னங்களோடுகூடிய, காஞ்சந காஞ்சீம் - தங்க ஒட்டியாணத்தையுடையவளும், அவநத ஜநாநுகம்பாம் - வணங்கிய ஜனங்களிடத்தில் தயையுடையவளும், அஸ்மத் அநுகூலாம் - நம்மிடத்தில் அனுகூலமாயிருப்பவளுமான, காஞ்சித் - ஒரு ஸ்த்ரீயை, அதிகாஞ்சி - காஞ்சீபுரியில், அநுகம்பாகூலம் - கம்பாநதிக்கரையில், அத்ராக்ஷம் - பார்த்தேன்.*

परिचितकम्पातीरं पर्वतराजन्यसुकृतसन्नाहम् ।
परगुरुकृपया वीक्षे परमशिवोत्सङ्गमङ्गलाभरणम् ॥ ८३ ॥

பரிசித கம்பாதீரம்
பர்வத ராஜந்ய ஸுக்ருத ஸந்நாஹம் |
பரகுரு க்ருபயா வீக்ஷே
பரமசிவோத்ஸங்க மங்களாபரணம் ||

*பரிசித கம்பாதீரம் - கம்பா நதிக்கரையில் இருந்து பழக்கப்பட்டதும் பர்வத ராஜந்ய - பர்வதங்களின் அரசனை ஹிமவானுடைய, ஸுக்ருத ஸந்நாஹம் - புண்யத்தின் ஆவிர்பாவமாயிருப்பதும், பரமசிவ உத்ஸங்க - பரமசிவனுடைய மடிக்கு, மங்கள ஆபரணம் - மங்களமான ஆபரணமாயிருப்பதுமான ஒரு மூர்த்தியை, பரகுருக்ருபயா - என் குருநாதருடைய க்ருபையால், வீக்ஷே - பார்க்கிறேன்.*

दग्धमदनस्य शम्भोः प्रथीयसीं ब्रह्मचर्यवैदग्धीम् ।
तव देवी तरुणिमश्रीचतुरिमपाको न चक्षमे मातः ॥ ८४ ॥

தக்த மதநஸ்ய சம்போ:
ப்ரதீயஸீம் ப்ரம்ஹசர்ய வைதக்தீம் |
தவ தேவீ தருணிமஸ்ரீ
சதுரிமபாகோ ந சக்ஷமே மாத: ||

*தேவி - தேவியே! மாத: - ஜனனீ! தக்த மதநஸ்ய - மன்மதனை எரித்தவரான, சம்போ: - பரமசிவனுடைய, ப்ரதீயஸீம் - பெரிதாகச்சொல்லப்பட்ட, ப்ரம்ஹசர்ய வைதக்தீம் - ப்ரம்ஹசர்ய நிலைமையின் ப்ரபாவத்தை, தவ - உன்னுடைய, தருணிம*

ஸ்ரீ - யௌவனத்திய அழகின், சதுரிம பாக: - ஸாமார்த்தியத்தின் வைபவமானது, ந சக்ஷமே - பொறுக்கிறதில்லை.

காமத்திற்கு அரசனான மன்மதனைக்கூட பரமசிவன் (அவன் வசப்படாமல்) எரித்துவிட்டதால், அவருடைய ப்ரம்ஹசர்ய நியமத்தின் புகழானது எங்கும் பரவத்தலைப்பட்டது. ஆயினும் அம்பிகையின் யௌவனத்தின் ஸௌந்தர்யமானது அதைப் பொறுக்காமல் பங்கப்படுத்தி விட்டதில் பரமசிவனுடைய புகழானது இருந்தவிடம் தெரியாமல் மறைந்துவிட்டது. இவ்விதமாக அம்பிகையின் ஸௌந்தர்யத்தையும், பரமசிவன் அம்பிகையிடத்தில் கொண்டிருக்கும் மோஹத்தையும் இந்த ஸ்தோத்ரம் முழுவதிலும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

இதற்குமேல் அம்பிகையின் ரூபவிசேஷங்கள் தனித்தனியாக வர்ணிக்கப்படுகின்றன.

मदजलतमालपत्रा वसनितपत्रा कराहतखनित्रा ।
विहरति पुलिन्दयोषा गुञ्जाभूषा फणीन्द्रकृतवेषा ॥ ८५ ॥

மதஜல தமால பத்ரா
வஸநித பத்ரா கராத்ருத கநித்ரா |
விஹரதி புளிந்தயோஷா
குஞ்ஜாபூஷா பணீந்த்ர க்ருதவேஷா ||

மத ஜலதமால பத்ரா - மதஜலத்தால் இடப்பட்ட திலகம் முதலிய அலங்காரத்தையுடையவளும், வஸநித பத்ரா - இலைகளை வஸனமாகத் (ஆடையாக) தரித்தவளும், கராத்ருத கநித்ரா - மண்வெட்டியைக் கையில் கொண்டவளும், குஞ்ஜா பூஷா - குந்து மணிகளாலான அலங்காரங்களை உடையவளும், பணீந்த்ர க்ருதவேஷா - ஸர்ப்பராஜங்களை அணிந்து கொண்டவளுமான, புளிந்தயோஷா - வேட ஸ்த்ரீயானவள், விஹரதி - விளையாடிக்கொண்டிருக்கிறாள்.

1. இதில் அம்பாளுடைய சபரீ ரூபமானது வர்ணிக்கப் பட்டிருக்கிறது. அர்ஜுனன் பாசுபதாஸ்த்ரத்தையுத்தேசித்து தபஸ் செய்யும்போது பரமசிவனானவர் அவனுடைய பக்தியின் அதிசயத்தை அறியவேண்டித் தான் கிராத (வேட) வேஷத்தை

*தரித்தும், வேடஸ்த்ரீ வேஷம்பூண்ட அம்பிகையுடனும் நாய்கள் வேஷமுடைய நான்கு வேதங்களோடும் மற்றும் கிராதர்களுக்குரிய சின்னங்களோடும் அவ்விடம் ஆவிர்பவித்ததும், அப்போது அவருக்கும் அர்ஜுனனுக்கும் யுத்தம் நடந்ததும், பிறகு அவர் அவனுக்கு பாசுபதாஸ்த்ரத்தை அளித்ததும், மஹாபாரதத்திலும் கிராதார்ஜுனீயத்திலும் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. அந்த ஸமயம் அம்பிகைகொண்ட வேடஸ்த்ரீ வேஷம் இதில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இங்குச்சொல்லப்பட்ட ஆடையாபரணங்களெல்லாம் வேடஸ்த்ரீகள் வழக்கமாகஅணிந்துகொள்வதே.*

2. *அம்பிகையின் சபரீ ரூபம் பின்வருமாறும் வர்ணிக்கப்பட்டிருக்கிறது:—*

'பர்ஹாவதம்ஸயுத பர்பர கேசபாசாம்
குஞ்ஜாவளீக்ருத கநஸ்தந ஹாரசோபாம் |
ச்யாமாம் ப்ரவாளவதநாம் ஸுகுமாரஹஸ்தாம்
த்வாமேவ நௌமி சபரீம் சபரஸ்ய ஜாயாம் ||'

(*அம்பாஸ்தவம்*)

'லுடத் குஞ்ஜாஹார ஸ்தநபரநமந் மத்யலதிகாம்
உதஞ்சத் கர்மாம்ப: கண குணித வக்த்ராம்புஜருசம் |
சிவம் பார்த்தத்ராண ப்ரவண ம்ருகயாகாரகுணிதம்
சிவாம் அந்வக் யாந்தீம் சபரமஹம் அந்வேமி சபரீம் ||'

(*ஸகல ஜனனீ ஸ்தவம்*)

'மாகந்த த்ரும பல்லவாருணபடீம் பூர்ணேந்து பிம்பாநநாம்
தேவீம் திவ்யமயீம் ப்ரஸந்ந ஹ்ருதயாம் த்யாயேத்
[கிராதாவ்ருதாம் |
பர்ஹாபீத கசாபிராமசிகுராம் பிம்போஜ்வலச் சந்த்ரிகாம்
குஞ்ஜாஹார லதாம்சுஜால விலஸத் க்ரீவாம் மதீரேக்ஷணாம்||

(*ஆகாச பைரவ கல்பம்*)

'ச்யாமாம் வன்ஹிகலாப சேகரயுதாம் ஆபத்த பர்ணாம்சுகாம்
குஞ்ஜாஹாரலஸத் பயோதரநதாம் அஷ்டாஹிபாந் பிப்ரதீம் |
தாடங்காங்கத மேகலா குணரணந் மஞ்ஜீரதாம் ப்ராபிதாந்
கைராதீம் வரதாபயோத்யதகராம் தேவீம் த்ரிநேத்ராம்பஜே||'

3. அம்பிகைக்கு இந்த ரூபத்தில் புளிந்தீ என்ற பெயர். இந்த ரூபத்திய உபாஸனையானது மிகவும் விசேஷமாகச் சொல்லியிருக்கிறது.

4. தமாலமென்றால் நெற்றியிலணியப்படும் (சந்தனம் முதலிய) ஜாதிக்குறி. பத்ரமென்பது ஸ்த்ரீகள் முகம், ஸ்தனம் முதலிய இடங்களில் செய்துகொள்ளும் அலங்கார விசேஷம்.

अङ्के शुकिनी गीते कौतुकिनी परिसरे च गायकिनी ।
जयसि सविधेऽम्ब भैरवमण्डलिनी श्रवसि शङ्खकुण्डलिनी ॥८६॥

அங்கே சுகிநீ கீதே
கௌதுகிநீ பரிஸரே ச காயகிநீ |
ஜயஸி ஸவிதேऽம்ப பைரவ-
மண்டலிநீ ச்ரவஸி சங்க குண்டலிநீ ||

அங்கே சுகிநீ - முன்கையில் கிளியையுடையவளும், கீதே கௌதுகிநீ - ஸங்கீதத்தில் உத்ஸாஹமுடையவளும், பரிஸரே ச - ஸமீபத்திலும் (தன்னைச் சுற்றியும்), காயகிநீ - காயகர்களை யுடையவளும் (அதாவது, பாடிக்கொண்டிருக்கும் சக்திகளால் சூழப்பட்டவளும்), ஸவிதே - பக்கத்தில், பைரவ மண்டலிநீ - பைரவர்களுடைய மண்டலங்களையுடையவளும், ச்ரவஸி - காதில், சங்க குண்டலிநீ - சங்கினாலான குண்டலங்களையுடையவளுமான, அம்ப-ஹே ஜனனி! ஜயஸி - நீ ஸர்வோத்கர்ஷத்துடன் விளங்குகிறாய்.

1. இதில் மந்த்ரிணீ ரூபமாக அம்பாள் வர்ணிக்கப்பட்டு இருக்கிறாள். மந்த்ரிணியானவள் லலிதாம்பிகைக்கு ப்ரதான மந்த்ரீ. அம்பிகையானவள் தனது ஸமஸ்த ராஜ்யபாரத்தையும் அவளிடம் ஒப்புவித்திருப்பதாகச் சொல்லப்படும். ஸங்கீதத்திற்கு அதிஷ்டான தேவதை. கையில் கிளியைத் தரித்திருப்பவளாகவும், ஸங்கீதத்தோடு கூடிய சக்தி ஸமூஹங்களால் சூழப்பட்டவளாகவும் த்யானிப்பது வழக்கம். மந்த்ரிணிக்கு சுகச்யாமளை என்றும், ராஜ ச்யாமளா என்றும், ஸங்கீத ச்யாமளா என்றும் இன்னும் அனேகம் பெயர்களுண்டு.

'ஸங்கீதயோகிநீ ச்யாமா ச்யாமளா மந்த்ரிநாயிகா |
மந்த்ரிணீ ஸசிவேசாநீ ப்ரதாநேசீ சுகப்ரியா ||
வீணாவதீ வைணிகீ ச முத்ரிணீ ப்ரியகப்ரியா |
நீபப்ரியா கதம்பேசீ கதம்பவநவாஸிநீ |
ஸதாமதா ச நாமாநி ஷோடசைதாநி கும்பஜ ||'
(லலிதோபாக்யானம்)

2. *ச்யாமளாயின் ஆவரண தேவதைகளில்,*

'அஸிதாங்கோ ருரு: சண்ட க்ரோதநோந் மத்தோ பயங்கர:
கபாலீ பீஷணச்சைவ ஸம்ஹாரர்த்யஷ்ட பைரவா: ||'

*என்ற பைரவாஷ்டகமடங்கிய பைரவமண்டலமானது ஐந்தாவது ஆவரணத்திலிருப்பதாகச் சொல்லப்படும்.*

3. *ச்யாமளாயின் காதில் சங்குண்டலம் தவிர தாளீபலாச தாடங்கம் (பனையோலைச்சுருள்) இருப்பதாகவும் வர்ணிக்கப்படும்.*

प्रणतजनतापवर्गा कृतरणसर्गा ससिंहसंसर्गा ।
कामाक्षि मुदितभर्गा हतरिपुवर्गा त्वमेव सा दुर्गा ॥ ८७ ॥

ப்ரணத ஜநதாபவர்கா
க்ருதரணஸர்கா ஸஸிம்ஹ ஸம்ஸர்கா |
காமாக்ஷி முதித பர்கா
ஹதரிபுவர்கா த்வமேவ ஸா துர்கா ||

*ப்ரணத ஜநதா (அ) பவர்கா - நமஸ்கரிக்கும் ஜனக்கூட்டங்களுக்கு மோக்ஷத்தைக் கொடுப்பவளும், க்ருதரணஸர்கா - யுத்தத்துக்குப் போகிறவளும், ஸஸிம்ஹ ஸம்ஸர்கா - ஸிம்ஹத்தோடிருப்பவளும், முதித பர்கா - பரமசிவனை ஸந்தோஷிக்கச் செய்தவளும், ஹதரிபுவர்கா - சத்ருக்கூட்டங்களை நாசம் செய்தவளுமான, ஸா துர்கா - அந்த துர்க்கையானவள், காமாக்ஷி - ஹே காமாக்ஷி! த்வமேவ - நீ தான்.*

*இதில் அம்பிகை துர்கா ரூபிணியாக வர்ணிக்கப்பட்டிருக்கிறாள். துர்கா தேவியின் ஆவிர்பாவம், பராக்ரமம், அனுக்ரஹம் முதலியவற்றைப்பற்றி தேவீ மாஹாத்ம்யம், தேவீ பாகவதம் முதலியவற்றில் பார்க்கவும்.*

"कृतबहुसर्गा" "க்ருதபஹு ஸர்கா" என்ற பாடத்தில் நானாவிதமான ஸிருஷ்டியைச் செய்பவளும் என்பது பொருள்.

श्रवणचलद्वेतण्डा समरोद्दण्डा धुतासुरशिखण्डा ।
देवि कलितान्त्रषण्डा धृतनरमुण्डा त्वमेव चामुण्डा ॥ ८८ ॥

ச்ரவண சலத் வேதண்டா
ஸமரோத்தண்டா துதாஸுரசிகண்டா |
தேவி கலிதாந்த்ரஷண்டா
த்ருத நரமுண்டா த்வமேவ சாமுண்டா ||

தேவி - ஹே காமாக்ஷி! ச்ரவண சலத் வேதண்டா - யானைகள் ஆடிடும் காதுகளையுடையவளும், ஸமரோத்தண்டா - யுத்தத்தில் பயங்கரமாயிருப்பவளும், துத அஸுர சிகண்டா - அஸுர ச்ரேஷ்டர்களை ஸம்ஹாரம் செய்தவளும், கலித ஆந்த்ர ஷண்டா - குடல்களின் கொத்துக்களை (வாயில்) உடையவளும், த்ருத நர முண்டா - நரர்களின் முண்டங்களை (மாலையாக) அணிந்தவளுமான, சாமுண்டா - சாமுண்டா தேவியும், த்வமேவ - நீயே.

இதில் அம்பிகை "சாமுண்டா" ரூபிணியாக வர்ணிக்கப்பட்டிருக்கிறாள். சண்டன், முண்டன் என்ற இரண்டு அஸுரர்களை ஸம்ஹாரம் செய்ததால் காளிகாதேவிக்குச் சாமுண்டா என்று பெயர் ஏற்பட்டது. காளிகாதேவியைப்பற்றி தேவீமாஹாத்ம்யம் காளிகா புராணம் முதலிய க்ரந்தங்களில் பார்க்கவும்.

"ச்ரவணசலத் வேதண்டா" என்பதற்கு காதில் அசைந்தாடும் தந்தகைகளுள்ளவளாயும் என்றும், "கலிதாந்த்ர ஷண்டா" என்பதற்கு நரம்பு மாலைபணிந்தவளாயும் என்றும் பொருள் சொல்லலாம்.

उर्वीधरेन्द्रकन्ये दर्वीभरितेन भक्तपूरेण ।
गुर्वीमकिञ्चनार्तिं खर्वीकुरुषे त्वमेव कामाक्षि ॥ ८९ ॥

உர்வீதரேந்த்ர கந்யே
தர்வீபரிதேந பக்த பூரேண |
குர்வீம் அகிஞ்சநார்த்திம்
கர்வீகுருஷே த்வமேவ காமாக்ஷி ||

*உர்வீதரேந்த்ர - பர்வதராஜனான ஹிமவானுடைய, கந்யே— பெண்ணே! காமாக்ஷி - ஹே காமாக்ஷி! தர்வீபரிதேந - (உன் கையிலுள்ள) கரண்டி நிறைந்ததான, பக்தபூரேண - அன்ன ப்ரவாஹத்தால், குர்வீம் அகிஞ்சந ஆர்த்திம் - அகிஞ்சனனுடைய (ஒன்றுமே யில்லாதவனுடைய, பரம ஏழையினுடைய) மிகக் கொடியதான (தாரித்ரியத்தின்) கஷ்டத்தை, த்வமேவ - நீயே, கர்வீகுருஷே – குறைத்துவிடுகிறாய் (போக்கடித்து விடுகிறாய்).*

*இதில் அம்பிகை அன்னபூர்ணா ரூபிணியாக வர்ணிக்கப் பட்டிருக்கிறாள். அன்னபூர்ணா தேவியானவள் இடது கையில் அன்னம் நிறைந்த பாத்ரத்தையும், வலது கையில் கரண்டியையும் வைத்துக்கொண்டு பக்தர்களுடைய பசியை (தாரித்ரியத்தை) போக்குவதாகச் சொல்லப்படுவாள்.*

'ஆதாய தக்ஷிணகரேண ஸுவர்ண தர்வீம்
துக்தாந்ந பூர்ணமிதரேண ச ரத்நபாத்ரம் |
அந்நப்ரதாந நிரதாம் நவஹேமவர்ணாம்
அம்பாம் பஜே கநகபூஷண மால்யசோபாம் ||'

*அன்னபூர்ணா தேவியைப்பற்றி "நித்யாநந்தகரீ வராபயகரீ" என்று ஆரம்பிக்கும் அழகிய ஸ்தோத்ரமொன்று ஸ்ரீ மதாசார் யாளால் செய்யப்பட்டிருக்கிறது.*

ताडितरिपुपरिपीडन-भयहरणनिपुणहलमुसला ।
क्रोडपति भीषणमुखी क्रीडसि जगति त्वमेव कामाक्षि ॥९०॥

தாடிதரிபுபரி பீடந-
பயஹரண நிபுண ஹலமுஸலா |
க்ரோடபதி பீஷண முகீ
க்ரீடஸி ஜகதி த்வமேவ காமாக்ஷி ||

*தாடித - அவமானப்படுத்தப்பட்ட (தோற்கடிக்கப்பட்ட) ரிபு-சத்ருக்களுடைய, பரிபீடந பய - உபத்ரவத்தின் பயத்தை, ஹரண—போக்குவதில், நிபுண - ஸாமர்த்யமுள்ள, ஹல முஸலா - கலப்பையையும், உலக்கையையும் கைகளில் வைத்துக்கொண் டிருப்பவளும், க்ரோடபதி - மஹத்தான வராஹத்தின், பீஷண முகீ—பயங்கரமான முகத்தையுடையவளுமான வாராஹி ரூபத்து டன், த்வமேவ-நீயே, ஜகதி க்ரீடஸி - உலகத்தில் விளங்குகிறாய்.*

1. *இதில் அம்பிகை வாராஹீ ரூபிணியாக வர்ணிக்கப்பட்டிருக்கிருள். வாராஹியானவள் லலிதாம்பிகையின் சதுரங்க ஸைன்யங்களுக்கு யஜமானி. துஷ்ட நிக்ரஹத்திற்கும் சிஷ்டாநுக்ரஹத்திற்கும் பூர்ணமான அதிகாரம் கொடுக்கப்பட்டவள். வாராஹியின் பெயர்கள் பின்வருமாறு:—*

'பஞ்சமீ தண்டநாதா ச ஸங்கேதா ஸமயேச்வரீ |
ததா ஸமயஸங்கேதா வாராஹீ போத்ரிணீ சிவா ||
வார்த்தாளீ ச மஹாஸேநாப்யாக்ஞா சக்ரேச்வரீ ததா |
அரிக்நீ சேதி ஸம்ப்ரோக்தம் நாமத்வாதசகம் முநே ||'

(*லலிதோபாக்யானம்*)

2. *வாராஹீதேவியின் அநுக்ரஹ சக்தியைப்பற்றியும் நிக்ரஹ சக்தியைப்பற்றியும் இரண்டு அஷ்டகங்கள் இருக்கின்றன.*

"करधृतरिपुपरिपीडनभयहरणहलमुसला" "*கரத்ருத ரிபுபரிபீடந பயஹரண நிபுண ஹலமுஸலா*"—*என்று ஒரு பாடம். கரத்ருத—கைகளில் தரிக்கப்பட்டதும், ரிபுபரிபீடந - சத்துருக்களின் பீடையையும், பய - பயத்தையும், ஹரண - போக்குவதில், நிபுண - ஸாமார்த்தியமுள்ளதுமான, ஹலமுஸலா - கலப்பை, உலக்கை இவைகளையுடையவள்—என்பது பொருள்.* "ताडितरिपुपरिवारा पीडनभयहरणनिपुणहलमुसला" "*தாடிதரிபுபரிவாரா பீடநபயஹரண நிபுண ஹலமுஸலா*"—*என்று ஒரு பாடம். தாடிதரிபுபரிவாரா—அடிக்கப்பட்ட சத்ருக்களின் பரிவாரங்களையுடையவளும், பீடந பயஹரண நிபுண ஹலமுஸலா - சத்ருக்களின் பீடாபயத்தைப் போக்குவதில் ஸமர்த்தமான கலப்பை, உலக்கை இவைகளையுடையவள்—என்பது பொருள்.*

**स्मरमथनवरणलोला मन्मथहेलाविलासमणिशाला ।**
**कनकरुचिचौर्यशीला त्वमम्ब बाला कराब्जधृतमाला ॥ ९१ ॥**

ஸ்மர-மதந-வரண-லோலா
மந்மத ஹேலா-விலாஸ-மணிசாலா |
கநகருசி சௌர்யசீலா
த்வமம்ப பாலா கராப்ஜ-த்ருதமாலா ||

அம்ப - தாயே! ஸ்மரமதந - பரமசிவனை, வரணலோலா — பாணிக்ரஹணம் செய்துகொள்வதில் பரபரப்புள்ளவளும், மன்மத - மன்மதனுடைய, ஹேலாவிலாஸ - ச்ருங்கார விலாஸங்களுக்கு (இருப்பிடமான), மணிசாலா - ரத்னக்ருஹமாயிருப்பவளும், கநகருசி சௌர்ய சீலா - ஸ்வர்ணத்தின் காந்தியை அபஹரிப்பதில் ஸாமர்த்தியமுள்ளவளும், கராப்ஜ த்ருத மாலா — தாமரஸ புஷ்பம் போன்ற கையில் மாலையைத் தரித்திருப்பவளுமான, பாலா த்வம் - குமாரீ (பாலாஸ்வரூப ஸ்வயம்வர கல்யாணியும்) நீ தான்.

இதில் அம்பிகை ஸ்வயம்வரையாக வர்ணிக்கப்பட்டிருக்கிறாள். இந்த ரூபத்திய த்யானம் பின்வருமாறு:—

பாலார்க்காயுத ஸப்ரபாம் கரதலே லோலம்பமாலாகுலாம்
மாலாம் ஸந்ததீம் மனோஹரதநும் மந்தஸ்மிதோத்யந்முகீம்!
மந்தம் மந்தமுபேயுஷீம் வரயிதும் சம்பும் ஜகன்மோஹினீம்
வந்தே தேவமுனீந்த்ர வந்திதபதாம் இஷ்டார்த்ததாம்
[பார்வதீம் ||

विमलपटी कमलकुटी पुस्तकरुद्राक्षशस्तहस्तपुटी ।
कामाक्षि पक्ष्मलाक्षी कलितविपञ्ची विभासि वैरिञ्ची ॥ ९२ ॥

விமலபடீ கமலகுடீ
புஸ்தக ருத்ராக்ஷ சஸ்த ஹஸ்தபுடீ |
காமாக்ஷி பக்ஷ்மலாக்ஷீ
கலித விபஞ்சீ விபாஸி வைரிஞ்சீ ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! விமலபடீ - வெண்மையான வஸ்த்ரத்தையுடையவளும், கமலகுடீ - தாமரஸ புஷ்பத்தை வாஸஸ்தானமாக உடையவளும், புஸ்தக ருத்ராக்ஷ சஸ்த ஹஸ்தபுடீ - புஸ்தகம், ருத்ராக்ஷமாலை இவைகளையுடைய அழகிய கைகளையுடையவளும், பக்ஷ்மலாக்ஷீ - அழகிய (இமை மயிர்களோடு கூடிய) கண்களையுடையவளும், கலித விபஞ்சீ - வீணையை(கைகளில்) உடையவளுமான, வைரிஞ்சீ - (ப்ரம்ஹ பத்னியான) ஸரஸ்வதியாக, த்வமேவ—நீயே, விபாஸி - விளங்குகிறாய்.

இதிலும், இதனடுத்துவரும் இரண்டு ச்லோகங்களிலும், முறையே ஸத்வ, ரஜஸ், தமோ குணங்கள் ப்ரதானமாயிருக்கும்

அம்பிகையின் மூன்று ரூப விசேஷங்கள் வர்ணிக்கப்பட்டிருக்கின்றன. இந்த ச்லோகத்தில் அம்பிகை சாரதா ரூபிணியாக வர்ணிக்கப்பட்டாள்.

कुङ्कुमरुचिपिङ्गमसृक्पङ्किलमुण्डालि मण्डितं मातः ।
जयति तव रूपधेयं जपपटपुस्तकवराभयाब्जकरम् ॥ ९३ ॥

குங்குமருசி பிங்கம் அஸ்ருக்-
பங்கில முண்டாலி மண்டிதம் மாத: |
ஜயதி தவ ரூபதேயம்
ஜபபட புஸ்தக வராபயாப்ஜகரம் ||

*மாத: - தாயே! குங்குமருசிபிங்கம்—குங்குமம்போல் சிவந்த நிறத்தையுடையதும், அஸ்ருக் பங்கில - ரத்தம் வழிந்து அழுக்கானதுமான, முண்ட அலி மண்டிதம் - (தலை) முண்டங்களின் வரிசையால் அலங்கரிக்கப்பட்டதும், ஜபபட புஸ்தக வராபயாப்ஜ கரம் - ஜபமாலை, புஸ்தகம், வரதமுத்ரை, அபயமுத்ரை, இவை களையுடைய கராப்ஜங்களுடையதுமான, தவ ரூபதேயம் - உன்னுடைய ரூபமானது, ஜயதி - ஸர்வோத்கர்ஷமாக விளங்குகிறது.*

*இதில் அம்பிகையின் த்ரிபுரா என்ற ரூப விசேஷமானது வர்ணிக்கப்பட்டிருக்கிறது. இந்த ரூபத்தைப்பற்றி “ப்ரபஞ்ச ஸாரத்தில்” சொல்லப்பட்டிருப்பது பின்வருமாறு:—*

‘ஆதாம்ரார்க்காயுதாபாம் கலித சசிகலா ரஞ்சிதப்தாம் த்ரிநேத்ராம்
தேவீம் பூர்ணேந்து வக்த்ராம் வித்ருத ஜபவட புஸ்தகாபீத்ய பீஷ்டாம் |
பீநோத்துங்க ஸ்தநார்த்தாம் வலிலஸித விலக்நாமஸ்ருக் பங்கராஜந்
முண்டஸ்ரங் மண்டிதாங்கீம் அருணதரதுகூலாநுலேபாம் நமாமி ||’

कनकमणि कलितभूषां कालायस कलहशीलकान्तिकलाम् ।
कामाक्षि शीलये त्वां कपालशूलाभिरामकरकमलाम् ॥ ९४ ॥

கநக மணி கலித பூஷாம்
காலாயஸ கலஹ சீல காந்திகலாம் |
காமாக்ஷி சீலயே த்வாம்
கபால சூலாபிராம கரகமலாம் ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி! கநகமணி கலித பூஷாம் - தங்கம், ரத்னங்கள் இவையாலான ஆபரணங்களால் அலங்கரிக்கப் பட்டவளும், காலாயஸ கலஹசீல - எஃகுடன் சண்டை செய்யக் கூடிய (அதாவது, எஃகின் நிறத்தைத் தோற்கடிக்கும்), காந்தி கலாம்—காந்தியை உடையவளும், கபால சூலாபிராம கரகமலாம் - கபாலம், சூலம் இவற்றுடனிருக்கும் கரகமலங்களையுடையவளுமாக, த்வாம் சீலயே - உன்னை த்யானிக்கிறேன்.

இதில் அம்பிகையின் ப்ரத்யங்கிரா ரூபமானது வர்ணிக்கப் பட்டிருக்கிறது. அதர்வண வேதத்தில் சொல்லப்பட்டிருக்கும் பத்ரகாளிக்கு ப்ரத்யங்கிரா என்று பெயர்.

लोहितिमपुञ्जमध्ये मोहितभुवनं मुदा निरीक्षन्ते ।
वदनं तव कुचयुगलं काञ्चीसीमां च केऽपि कामाक्षि ॥९५॥

லோஹிதிம புஞ்ஜ மத்யே
மோஹித புவநம் முதா நிரீக்ஷந்தே |
வதநம் தவ குசயுகளம்
காஞ்சீஸீமாம் ச கேZபி காமாக்ஷி! ||

காமாக்ஷி - ஹே காமாக்ஷி!, லோஹிதிம புஞ்ஜ மத்யே - சிகப்பின் ராசிபோன்றதான அநாஹத சக்ரத்தில் (அதாவது, மனதில்) மோஹித புவனம் - உலகத்தை மோஹிக்கச் செய்யும், தவ - உன்னுடைய, வதனம் - முகத்தையும், குசயுகளம் - இரு ஸ்தனங்களையும், காஞ்சீ ஸீமாம் ச - காஞ்சீ ப்ரதேசத்தையும், கேZபி - சில புண்யவான்கள் மட்டும், முதா - ஆனந்தத்துடன், நிரீக்ஷந்தே - பார்க்கிறார்கள்.

1. இதில் அம்பிகையின் காமகலாரூபம் வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அது மிகவும் ரஹஸ்யமானதாய் இருந்தபோதிலும் சில விபரங்கள் கீழே சொல்லப்படுகின்றன. அதிகமாகத் தெரிந்துகொள்வதானால் ஸேதுபந்தம், காமகலா விலாஸம், ஆர்தர் ஏவலனுடைய கிரந்தங்கள் இவற்றைப் பார்ப்பதோடு குருமுகமாகவும் தெரிந்துகொள்ளவேண்டியது அவச்யம்.

2. இந்த ரூபமானது துரீயஸ்வர ரூபமானது. அதில் முகத்தை ஒரு பிந்துவாகவும், இருஸ்தனங்களை இரண்டு பிந்துக்களாகவும் அவற்றிற்குக் கீழாக குஹ்யப்ரதேசத்தையும் த்யானிக்க வேண்டும். அவற்றை இங்கு முறையே வதனம், குசயுகளம், காஞ்சீஸீமா என்று சொல்லியிருக்கிறது.

'பிந்துரு முகம், பிந்துத்வயேன குசௌ
ஸபரார்த்தேந யோனிம்
க்ருத்வா காமகலாம் இதி த்யாத்வா |
(பரசுராம கல்பஸூத்ரம்)

'முகம் பிந்தும் க்ருத்வா குசயுகம் அதஸ்தஸ்ய தததோ
ஹரார்தம் த்யாயேத் யோ ஹரமஹிஷி தே மன்மதகலாம் |'
(ஸௌந்தர்யலஹரீ)

3. *காஞ்சீஸீமா என்றால் காஞ்சியை(மேகலை, ஒட்டியாணம்) தரிக்குமிடம், அதாவது யோனி ப்ரதேசம் என்று அர்த்தம். இதேமாதிரி யோனியை ரசனுஸ்பதமென்று கீழேகண்ட காம கலாத்தியானத்திலும் சொல்லியிருக்கிறது.*

'அக்ரபிந்து பரிகல்பிதாநநாம்
அந்யபிந்து ரசிதஸ்தநத்வயீம் |
நாதபிந்து ரசநாகுணாஸ்பதாம்
நௌமி தே பரசிவே பராம் கலாம் ||'

4. *இம்மூன்று பிந்துக்களின் ஸமஷ்டியான காமகலாரூபி ணியாக அம்பிகையை த்யானிக்கும் பக்தனே லோகங்களை எல் லாம் மோஹிக்கச் செய்பவனாகச் சொல்லப்பட்டிருக்கிறான்.*

'ஸ ஸத்ய: ஸங்க்ஷோபம் நயதி வநிதா இத்யதிலகு
த்ரிலோகீமப்யாசு ப்ரமயதி ரவீந்துஸ்தனயுகாம் ||'
(ஸௌந்தர்யலஹரீ)

*ஆகவே அம்பிகையின் காமகலா' ரூபத்தை 'மோஹித புவ னம்' என்று இங்கு சொல்லப்பட்டதின் காரணம் சொல்லத் தேவையில்லை.*

**जलधिद्विगुणितहुतवहदिशादिनेश्वरकलाश्विनेयदलैः ।**
**नलिनैर्महेशी गच्छसि सर्वोत्तरकरकमलदलममलम् ॥ ९६ ॥**

ஜலதி த்விகுணித ஹுதவஹ
திசா திநேச்வர கலாச்விநேயதளை: |
நளிநைர் மஹேசி கச்சஸி
ஸர்வோத்தர கர கமலதளம் அமலம் ||

*மஹேசி - மஹேச்வரியாகிய ஹே காமாக்ஷி! ஜலதி, த்வி குணித ஹுதவஹ, திசா, திநேச்வர, கலா, (அ) ச்விநேய தளை: - முறையே* 4, 6, 10, 12, 16, 2 *தளங்களுடைய, நளினை:- கமலங்கள் (சக்ரங்கள்) மூலமாக, அமலம் - பரிசுத்தமானதும்,*

ஸர்வோத்தர - எல்லாவற்றிற்கும் மேல்பட்டதுமான, கரகமல தளம் - ஸஹஸ்ரதள கமலத்தை, கச்சஸி - அடைகிறாய்.

1. இங்கு குண்டலினீ ரூபிணியான அம்பிகையானவள் ஷட்சக்ர பேதனம் செய்து ஸஹஸ்ரார கமலத்திற்குப் போவது சொல்லப்பட்டது. இதைப்பற்றி ஸ்ரீ மதாசார்யாள் 'ஸௌந்தர்ய லஹரி'யில்,

'மஹீம் மூலாதாரே கமபி மணிபூரே ஹுதவஹம்
ஸ்திதம் ஸ்வாதிஷ்டானே ஹ்ருதி மருதமாகாசமுபரி |
மனோzபி ப்ரூமத்யே ஸகலமபி பித்வா குலபதம்
ஸஹஸ்ராரே பத்மே ஸஹ ரஹஸி பத்யா விஹரஸே ||'

என்று சொல்லியிருக்கிறார்கள். அந்த வரிசையை அனுஸரித்து ஷட் சக்ரங்கள் (அவற்றின் தளங்களுடைய கணக்கைச்சொல்லி) இங்கு சொல்லப்பட்டிருக்கின்றன.

2. இந்த (ஷட்) சக்ரங்களை கமலங்களென்றும் சொல்லுவது வழக்கம். அப்படிச் சொல்லுகையில் மூலாதாரத்திற்கு நான்கும், மணிபூரகத்திற்கு ஆறும், ஸ்வாதிஷ்டானத்திற்குப் பத்தும், அனாஹதத்திற்கு பனிரெண்டும், விசுத்திக்கு பதினாறும் ஆக்ஞாவுக்கு இரண்டும், தளங்களிருப்பதாகச் சொல்லப்படும்.

3. ஜலதியென்றால் ஸமுத்ரம் என்று அர்த்தம். ஸமுத்ரங்களை ஸாதாரணமாக (சதுஸ்ஸாகர, சதுஸ்ஸமுத்ர என்று நான்கு என்று சொல்லப்படுவதால்) ஜலதி என்பது நான்கைக்குறிக்கும். ஹுதவஹ - அக்னி. அக்னியானது கார்ஹபத்யம், ஆஹவநீயம் தக்ஷிணாக்னி என்று மூன்றாகையால், ஹுதவஹம் என்பது மூன்றைக் குறிக்கும். அதை த்விகுணிதமாகச் செய்தால் (இரண்டால் பெருக்கினால்) ஆறு. திக்குகள் பத்து என்று சொல்லப்படுவதால் திசா என்ற பதமானது பத்தைக் குறிக்கும். தினேசர்கள் (ஸூர்யர்கள், ஆதித்யர்கள்) பன்னிரெண்டு பெயர்களென்று சொல்லப்படுவதால் தினேச என்ற பதமானது பன்னிரெண்டைக் குறிக்கும். அச்வினீ தேவர்கள் இருவர்களாகையால் ஆச்வினேய என்ற பதமானது இரண்டைக்குறிக்கும்.

"सर्वोत्तरकुल सहस्रदलममलम्" என்றும் பாடம்.

सन्क्रन्देशि त्वच्चरणाः सबीजनिर्बीजयोगिनिश्रेण्या ।
अपवर्गसौधवलभिमारोहन्त्यम्ब कोऽपि तव कृपया ॥ ९७ ॥

ஸத்க்ருத தேசிக சரணா:
ஸபீஜ நிர்பீஜ யோக நிச்ரேண்யா |
அபவர்க ஸௌத வலபிம்
ஆரோஹந்த்யம்ப கேசபி தவக்ருபயா ||

அம்ப - ஜகன் மாதாவே! ஸத்க்ருத தேசிக சரணா:-குருநாதருடைய பாதங்களைப் பூஜித்தவர்களான, கே அபி - சில பாக்கிய சாலிகள், ஸபீஜ நிர்பீஜ யோகநிச்ரேண்யா-ஸபீஜயோகம், நிர்பீஜ யோகம் என்ற மாடிப்படிகள் வழியாக, அபவர்க ஸௌதவலபிம்-மோக்ஷமென்ற மாளிகையின் உச்சிமாடிக்கு, தவ க்ருபயா - உன்னுடைய அனுக்ரஹத்தினால், ஆரோஹந்தி - ஏறுகிறார்கள்.

1. இதில் பக்தர்கள் யோகாப்யாஸத்தின் மூலமாக அம்பிகையை உபாஸித்து பரம புருஷார்த்தமான மோக்ஷத்தையடைவதாகச் சொல்லப்படுகிறது. அதற்கு முக்யமான ஒத்தாசையானது குருவின் உபதேசமாதலால் அது இங்கு 'ஸத்க்ருத தேசிக சரணா:' என்று சொல்லப்பட்டது.

2. ஸௌதமென்றால் பலமாடிகளையுடைய மாளிகை யென்றர்த்தம். வலபீ என்றால் அப்பேர்ப்பட்ட மாளிகையின் மாடிகள் எல்லாவற்றிற்கும் மேலான மாடியென்றர்த்தம். மோக்ஷமானது பல மாடிகளுடைய மாளிகையாக 'அபவர்கஸௌத' மென்று இங்கு சொல்லப்பட்டது. மோக்ஷமென்பது ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூப்யம், ஸாயுஜ்யம், கைவல்யம் என்று மேம்மேலான ஐந்து மாடிகளில் எல்லாவற்றிற்கும் மேலானதான கைவல்ய மோக்ஷம் "அபவர்கஸௌதவலபீ" என்று இங்கு சொல்லப்பட்டது.

3. இப்பேர்ப்பட்ட மாளிகையிலுள்ள மாடிகளை ஏறுவதற்காக ஏற்பட்ட (நிச்ரேணீ) மாடிப்படிகளாக யோகம் சொல்லப்பட்டது. யோகமானது ஸோபானக்ரமமானதாக (படிப்படியானதாக) சொல்லப்படும். அப்படி படிப்படியாக ஏறிவரும்போது முடிவாக ஸபீஜயோகமென்ற ஸம்ப்ரக்ஞாத ஸமாதியானது ஏற்படுகிறது. பீஜமென்பதினால் பூர்வ கர்மாக்களின் ஸம்ஸ்கார வசத்தால் ஏற்படும் விருத்தியானது குறிப்பிடப்பட்டது. இது ஸம்ப்ரக்ஞாத ஸமாதிகாலத்திலுமிருப்பதால் அதை ஸபீஜயோக மென்று சொல்லப்பட்டது. அதற்கு மேலாக அவ்விதமான வ்ருத்தியும் அற்றுப்போய், கர்ம ஸம்ஸ்காரங்கள் இருந்தும்

மனதானது நிராலம்பனமானதாகவும், நிர்விகல்பமாகவும் இருப்பதானது அஸம்ப்ரக்ஞாத ஸமாதியென்றும், நிர்பீஜயோகமென்றும் சொல்லப்படும். இந்த நிலையில் தான் கைவல்ய முக்தியேற்படுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. (இந்த விஷயங்களை பற்றி அறியவேண்டுமானால் பதஞ்ஜலிமஹர்ஷியின் யோகஸூத்ரங்களையும், ராஜயோகத்தைப்பற்றிய புஸ்தகங்களையும் பார்க்கவும்.)

4. இப்படி யோகாப்யாஸத்தினால் எவ்வளவு முயன்றாலும் மோக்ஷம் கிடைப்பதானது அம்பிகையின் அனுக்ரஹத்தைப் பொருத்ததாக இருப்பதால் அதையும் இங்கு 'தவக்ருபயா' என்று குறிக்கப்பட்டது.

अन्तरपि बहिरपि त्वं जन्तुततेरन्तकान्तकृदहन्ते ।
चिन्तितसन्तानवतां सन्ततमपि तन्तनीषि महिमानम् ॥९८॥

அந்தரபி பஹிரபி த்வம்
ஜந்துததேரந்தகாந்த க்ருதஹந்தே |
சிந்தித ஸந்தாநவதாம்
ஸந்ததமபி தந்தநீஷி மஹிமாநம் ||

அந்தகாந்தக்ருத் - அந்தகனுக்கு (யமனுக்கு) அந்தத்தை (மரணத்தை) உண்டு பண்ணின (அதாவது, மார்க்கண்டேயருக்காகக்காலனை ஸம்ஹாரம் செய்த) பரமசிவனுடைய, அஹந்தே - அஹங்கார ரூபிணியாயிருக்கும், த்வம் - நீ, ஜந்துததே: - ஸகல பிராணிகளுக்கும், அந்தரபி - உள்ளிலும், பஹிரபி-வெளியிலும், இருந்துகொண்டு, சிந்தித ஸந்தானவதாம் - இடைவிடாத த்யானத்தையுடைய பக்தர்களுக்கு, ஸந்ததமபி - எப்போதும், மஹிமானம் - மேன்மையை, தந்தநீஷி - அதிகரிக்கச் செய்கிறாய்.

1. நிருபாதிக ஸம்வித் ரூபமாயிருக்கும் பரப்ரம்ஹத்திற்கு அத்துடன் அபின்னமாயிருக்கும் சக்தியினால்தான் அஹம் என்ற உணர்ச்சியானது ஏற்படுவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ப்ரகாச ரூபமானது விமர்ச ரூபமான கண்ணாடியில் தன் ப்ரதிபிம்பத்தைப் பார்த்தவுடன் அது யாரென்ற ஸந்தேஹம் தோன்றி தான் தான் (அஹமஹம்) என்ற உணர்ச்சியானது ஏற்படுகிறது.

'பரசிவ ரவிகரநிகரே ப்ரதிபலதி விமர்சதர்பணேவிசதே | '
(காமகலாவிலாஸம்)

இதிலிருந்துதான் ஜகத் ஸ்ருஷ்டி ஏற்படுவதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

'ஸதேவ ஸௌம்யேதமக்ர ஆஸீத்
ஏகமேவாத்விதீயம் ப்ரம்ஹ
ததைக்ஷத, ஸோயம் தேவதைக்ஷத
ப்ரம்ஹ வா இதமக்ர ஆஸீத்
ததாத்மான மேவ வேதாஹம் ப்ரம்ஹாஸ்மீதி
ஸ ஈக்ஷத இமான் லோகான் ஸ்ருஜே' (ச்ருதி)

2. *இப்படி ஸகல ஜகத் ஸ்ருஷ்டிக்கும் காரணமான பரம சிவனுடைய அஹம்பாவத்திற்கு அம்பிகை காரணமாயிருப்பதால் அம்பிகையை அவருடைய அஹந்தா ரூபிணியென்றும் அஹங்கார ரூபிணியென்றும் சொல்வது வழக்கம்.*

'புரஸ்தாத் ஆஸ்தாம் ந: புரமதிதுராஹோ புருஷிகா |'
(*ஸௌந்தர்யலஹரீ*)

'அஹம்தாம் ஆலம்பே த்ருடதரம் அஹந்தாம் பசுபதே: |'
(*நீலகண்டவிஜயம்*)

**कलमञ्जुलवागनुमित-गलपञ्जरशुकग्रहौत्कण्ठ्यात् ।**
**अम्ब रदनाम्बरं ते बिम्बफलं शम्बरारिणा न्यस्तम् ॥ ९९ ॥**

கலமஞ்ஜுள வாகநுமித
கலபஞ்ஜர சுகக்ரஹௌத்கண்ட்யாத் |
அம்ப ரதநாம்பரம் தே
பிம்ப பலம் சம்பராரிணா ந்யஸ்தம் ||

*அம்ப - தாயே! கல மஞ்ஜுள - அத்யந்தம் இனிமையான, வாக் - குரலிலிருந்து, அனுமித - ஊஹிக்கப்பட்ட, கள பஞ்ஜர - கழுத்தாகிற கூட்டிலிருக்கும், சுக - கிளியை, க்ரஹௌத்கண்ட்யாத் - பிடிக்கவேண்டுமென்கிற ஆசையினால், சம்பராரிணா - மன்மதனால், ந்யஸ்தம் - வைக்கப்பட்ட, பிம்பலம் - கோவைப் பழம் போல், தே - உன்னுடைய, ரதனாம்பரம் - உதடு (தோன்றுகிறது).*

1. *அம்பிகையின் உதடானது கோவைப்பழம் போலிருப்பதை இதில் வெகு அழகாக வர்ணித்திருக்கிறது. அம்பிகையின் குரலானது அவளுடைய கழுத்திலிருந்து வெளிவருவதைக் கேட்ட மன்மதனானவன் அந்தக் கழுத்தாகிற கூண்டிற்குள் ஒரு கிளி இருந்து பேசுவதாக நினைக்கலானான். அதன்பேரில் அதைப் பிடிக்கவேண்டுமென்ற ஆசை அவனுக்கு உண்டாயிற்று. ஸாதா*

ரணமாக கிளிகளைப் பிடிப்பதற்கு அவற்றிற்குப் பிரியமுள்ள ஒரு வஸ்துவை அவற்றினெதிரில் வைத்து அதைத்தின்ன அவைவரும் போது பிடிப்பது வழக்கம். கிளிகளுக்கு கோவைப்பழத்தில் ப்ரியமதிகமென்று மன்மதனுக்குத் தெரியுமாகையால் அம்பிகையின் உதடாகிற கோவைப்பழத்தை வைத்து அந்தக் கிளியைப் பிடிக்க மன்மதன் ஏற்பாடு செய்ததாக இங்கு வர்ணிக்கப்பட்டது அம்பிகையின் கழுத்து கிளிக்கூட்டுக்கும், குரல் கிளியின் குரலுக்கும், அதரம் கோவைக்கனிக்கும் உபமிக்கப்பட்டிருக்கின்றன.

2. சம்பராஸுரன் என்ற மிகவும் மாயாவியான அஸுரனை ஸம்ஹாரம் செய்ததால் மன்மதனுக்குச் சம்பராரியென்று பெயர். இப்படி எல்லாரையும் விட மாயாவியாயும் ஸகல ஜனங்களுடைய மனதையும் மயக்கிக் கலக்குகிறவனுமான மன்மதனே அம்பாளுடைய குரலின் இனிமையைப்பார்த்து மயக்கமடைந்தானென்றால் அதைப்பற்றி அதிகமாக வர்ணிக்கவேண்டியது அனுவச்யம். மேலும், அப்பேர்ப்பட்டவன் வைக்கும் கோவைப்பழமானது ஸாமான்யமானதாக இருக்கக்கூடியதல்லவாகையால் அம்பிகையின் அதரத்தினழகைப்பற்றியும் அதிகம் சொல்லத்தேவையில்லை.

3. ரதனம் என்றால் பல். அதற்கு ஆடையாக இருப்பது ரதனாம்பம் - உதடு.

4. அம்பிகையின் கழுத்து, குரல், அதரம் இவற்றின் அழகைப்பற்றி ஸ்ரீமதாசார்யாளும் மிகவும் விசேஷமாக 'ஸௌந்தர்யலஹரீ'யில் வர்ணித்திருப்பதையும் பார்க்கவும்.

जय जय जगदम्ब शिवे जय जय कामाक्षि जय जयाद्रिसुते।
जय जय महेशदयिते जय जय चिद्गगनकौमुदीधारे ॥१००॥

ஜய ஜய ஜகதம்ப சிவே
ஜய ஜய காமாக்ஷி ஜய ஜயாத்ரிஸுதே |
ஜய ஜய மஹேசதயிதே
ஜய ஜய சித்ககந கௌமுதீ தாரே ||

ஜகதம்ப - ஜகன்மாதாவே! சிவே-பரமசிவனுடைய பத்னியே ஜயஜய - ஸர்வோத்கர்ஷமாக (என்முன்) விளங்கிக்கொண்டிருக்கவும், காமாக்ஷி - ஹே காமாக்ஷி! அத்ரிஸுதே - பர்வதராஜன் பெண்ணே! (ஜயஜய) மஹேசதயிதே - பரமேச்வரனுடைய

பத்னியானவளே! (ஜயஜய), சித்கன கௌமுதீதாரே - சித் என்ற ஆகாசத்திலிருந்து பெருகும் நிலவின் தாரையாயிருப்ப வளே! (ஜயஜய)

இதுவரையில் அம்பிகையைப்பற்றிப் பலவிதமாக வர்ணித் திருந்தும் த்ருப்தியடையாத கவியானவர் அம்பிகையைப் பல பெயர்களாலழைத்துத் தன்னை அனுக்ரஹிக்கவேண்டி, எப் போதும் தன் முன்பாக ஜயத்துடன் விளங்கிக்கொண்டிருக்க வேண்டுமென்று ப்ரார்த்திக்கிறார். ['ஜயஜய' என்று அம்பிகை யை ஜயத்தோடிருக்க வேண்டுமென்று ஆசிர்வதிப்பதானது ஸ்தோத்ரம் செய்வதில் ஒருவிதம்.]

இத்துடன் சதகம் முடிந்தது. அடுத்த ச்லோகமானது பல ச்ருதியை (இதைச் சொல்வதினால் உண்டாகும் அம்பிகையின் அனுக்ரஹத்தை) சொல்லுகிறது.

आर्याशतकं भक्त्या पठतामार्याकटाक्षेण ।
निःसरति वदनकमलाद्वाणी पियूषधोरणी दिव्या ॥ १०१ ॥

ஆர்யா சதகம் பக்த்யா
பட்தாம் ஆர்யா கடாக்ஷேண |
நிஸ்ஸரதி வதநகமலாத்
வாணீ பீயூஷதோரணீ திவ்யா ||

பக்த்யா - பக்தியுடன், ஆர்யாசதம் - இந்த ஆர்யாசதகத்தை படதாம் - வாசிப்பவர்களுக்கு, ஆர்யா கடாக்ஷேண - ஜகதம் பிகையின் கடாக்ஷத்தினால் (அனுக்ரஹத்தினால்). வதனகமலாத்-அவர்களுடைய முகார விந்தங்களிலிருந்து, திவ்யா வாணீ - திவ் யமான (மிகவும் உயர்ந்த) வாக்கானது, பீயூஷதோரணீ—அம்ருத தாரை போல், நிஸ்ஸரதி - வெளிவருகிறது (ப்ரவஹிக்கிறது).

மூகபஞ்சசதீ முதல் பாகம்

ஆர்யா சதகம் முற்றிற்று.

